# ஸ்ரீ கிருஷ்ணஸ்வாமி தூது

(இசை நாடகம்)

ஆசிரியர்

நங்கநல்லூர்

**மணவாளதாசன்**

சிட்டுக் குருவி பதிப்பகம்
மறைமலை நகர்
செங்கை எம்.ஜி.ஆர். மாவட்டம்
603 209.

ஸ்ரீ
பத்மாவதி சமேத
ஸ்ரீநிவாசாய நம:

திருமலை திருப்பதி
தேவஸ்தான சமய
நூல்கள் வெளியீட்டு நிதி
உதவித் திட்டத்தின் கீழ்
நிதி உதவி பெற்று,
இந்நூல்
வெளியிடப்படுகிறது.
தாளும் தடக்கையும்
கூப்பி
நன்றி நவிலுகின்றேன்

அடியேன்

நங்கநல்லூர்
மணவாளதாஸன்

# இந்நூல் பற்றிய குறிப்புகள்


நூலின் பெயர் : ஸ்ரீகிருஷ்ணஸ்வாமி தூது

ஆசிரியர் : மணவாளதாசன்
(இயற்பெயர் R. சந்திரகாந்த்)

நூற்பொருள் : தெய்வ பக்தியை வளர்க்கும் இசை நாடகம்

உரிமை : மணவாளதாசன் (ஆசிரியர்)

தாள் : 11.6 கே.ஜி. வெள்ளைத்தாள்

அச்சு : 10 பாயிண்ட்

வெளியிட்ட ஆண்டு : 1992

அச்சிட்ட படிகள் : 1200

பக்கங்கள் : 70

விலை : ரூ.9.50/-

பதிப்பகம் : சிட்டுக்குருவி பதிப்பகம்
மறைமலை நகர்,
தமிழ் நாடு - 603 209

# அணிந்துரை

"ஸ்ரீமத் ராமாயணம் சிறையிருந்தவள் ஏற்றம் கூறும்
ஸ்ரீமத் பாரதம் தூது சென்றவன் ஏற்றம் பகரும்"

— என்பது பெரியோர் வாக்கு. சிறையிலே இருந்ததற்கே ஏற்றம் என்றால் சிறையிலே பிறந்தால் மேலும் சிறப்போ என எண்ணிக் கண்ணன் சிறையிலே பிறந்ததற்குக் காரணம் கூறுவர். பாரதத்தின் உயிர் நாடியான "கண்ணன் தூது" என்ற பகுதியை நாடகவுருவில் எழுதியுள்ளார் என் அருமைச் செல்வர் மணவாளதாஸர். இவ்வழகிய நூல் வில்லிப்புத்தூராரின் பாரதக் கருத்துக்களையே அடிப்படையாகக் கொண்டு எழுதப்பட்டுள்ளதால் முதல் நூலை முற்றும் படித்தறிய வேண்டும் என்ற ஆவலைத் தூண்டிவிடுகின்றது.

ஆழ்வாராதிகளின் வரலாற்றை வடிவழகிய நம்பிதாஸர் என்ற பெரியார் கவிதை உருவிலே அருளிச் செய்துள்ளார். என் அன்புச் செல்வர் மணவாளதாஸர் ஆண்டாள் வரலாற்றை 'பரமனை நாடிய பாவை' என்ற நாடக நூலாக எழுதியுள்ளார்.

வடிவழகிய நம்பிதாசரின் வாக்கைப் பின்பற்றி ஏனைய ஆழ்வாராதிகளின் வரலாறுகளையும் இவ்வாசிரியர் நாடக உருவில் எழுதி ஆழ்வாராதிகளின் வரலாறுகளை உலகமறியச் செய்ய வேண்டும். எத்தனையோ தொடர் சொற்பொழிவுகள் செய்யும் அன்பர்கள் ஆழ்வாராதிகளின் வரலாற்றுகளைத் தொடர்ந்து சொற்பொழிவாற்றவில்லையே என அடியேன் எண்ணி வருந்துவதுண்டு. இவ்வாசிரியர் நாடகங்களாக எழுத இறைவன் அருள் பாலிக்க வேண்டுகிறேன்.

அன்பர் செல்வர் மணவாளதாஸர் இளைஞர். அறிவுத் திறனும், பக்தியும், இலக்கிய ஆர்வமும், இசையில் பயிற்சியும், பல இசைக் கருவிகளைத் தானே இயக்கும் ஆற்றலுமுடையவர். அடியேனிடம் ஸ்ரீமத் கம்பராமாயணம் பாடங் கேட்டு அரங்கேற்றும் நிலையிலுள்ள மாணவர் என மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறேன். அந்த நன்னாள் விரைவில் வரட்டும்!

நமது பெரியோர்களின் வாழ்க்கை வரலாறுகளையும் அவர்களது வாக்கு வன்மை நிறைந்த நயங்களையும் இந்த இளம் கலைஞர் தனது சொற்பொழிவுகள் மூலமாகவும், எழுதும் திறத்தினாலும், நாடக அரங்கேற்றங்கள் மூலமும் உலகம் நன்கு அறியும்படி சேவை செய்ய இவருக்கு நீண்ட ஆயுளையும், உடல் உரத்தையும், செல்வத்தையும் அருளுமாறு என் அன்னை சீதையின் ஆருயிர் நாயகரான சக்கரவர்த்தி திருமகனின் திருவடிகளை வேண்டி வணங்கி அவற்றை என் சென்னியில் சூட்டிக் கொள்கிறேன்.

வாழ்க மணவாள தாஸர்! வளர்க அவர் தம் புலமை!!

இராமபிரானின் அடிமை
ஸ்ரீராமகதா ரத்ன
வே. தியாகராசன்
ஸ்ருங்கேரி ஆஸ்தான வித்வான்

11.2.1991

தந்தி: ராமகதா, சென்னை -. 61
17, 27வது தெரு,
தில்லைகங்கா நகர்,
நங்கைநல்லூர்,
சென்னை - 600 061

உ

ஸ்ரீ அபிராமி துணை

# வாழ்த்துரை

இராமாயணம், மஹாபாரதம், இரண்டும் இந்தியாவில் கலாச்சார சிகரம். தர்மத்தைப் புரிந்து கொள்ளவும், அதர்மம் நிலைக்காது என்பதை உணர்த்தவும், நம் நாடு பெற்ற அழியாச் செல்வம். மஹாபாரதத்தில் துவாரகைக் கண்ணன் வருமிடமெல்லாம், அறநெறியின் அடிச்சசுவடுகளைக் காணமுடியும்.

ஸ்ரீகிருஷ்ண பரமாத்மா, என்றுமே அன்பினால் வழிகாட்டி, தத்துவங்களால் தெளிவுபடுத்தி, தர்மத்தின் பக்கம் நின்று அருள்புரிந்தான். பாண்டவர்களுக்காக, அதாவது நியாயத்திற்காக அவன் தூது சென்ற காட்சி, பாரதப் போர் நிகழாமல் நியாயத்தை நிலைநாட்ட என்று இருந்தாலும், துரியோதனனின் கொடூரத்தனத்தை அழிக்க, போர் அவசியம் என்பதையும் கண்ணன் உணர்ந்தவனாயிற்றே. அந்த கண்ணன் பாண்டவர்களுக்காக தூது புறப்பட்டது, தர்மத்தை உலகம் உணர்ந்து கொள்ளத்தான். அந்த கிருஷ்ணன்தூதுதான் புத்தகவடிவிலே, ஸ்ரீ கிருஷ்ணஸ்வாமி தூது என்று என் அருமை தம்பி ஆர். சந்திரகாந்த், வானொலிக்கு இசைச்சித்திரமாக எழுதி அமைத்து லட்சோபலட்ச ரசிகர்களின் பாராட்டுதல்களை பெற்றது என்பதை, உறுதியாக என்னால் கூறமுடியும். பாடல்கள், தமிழக்கு பெருமையும் இசைக்கு ஏற்ற அளவில் எளிமையான இனிமையான வகையில் அமைந்ததாகும். இதை சிட்டுக் குருவி பதிப்பகத்தால் வெளியிடுவது, அருமை தம்பி எஸ். பாலக்கிருஷ்ணனின் தொண்டுக்கு ஒரு எடுத்துக்காட்டு. இப்புத்தகம் தேவஸ்தான மானியத்துடன் வெளியிடப்படுவதால் தனிச்சிறப்பு பெறுகிறது. வாழ்த்துகிறேன்.

வளர்க ! வாழ்க !

8.7.92

அன்பன்

கூத்தபிரான்

வானொலி அண்ணா,

சென்னை வானொலி நிலையம்.

4, அருணாசலபுரம்,
அடையாறு, சென்னை - 20
தொலைபேசி: 412767

# பதிப்பகம் பகர்வது

"இக்கரை யந்திரத்துட்பட்டதென்ன விருவினையுள்
புக்கரை மாநொடி யுந்திரி யாதுழல் புன்பிறப்பாம்
எக்கரை நீக்கிப் படித்தாரை யந்த விருவிரசைக்கு
அக்கரை சேர்க்கு மணவாள தாசனருங்கவியே"

— என்ற பாடலின்படி எனது உடன் பிறவா அன்புச் சகோதரர் "இன்னிசை இளவல்" "முத்தமிழ்த் திலகம்" மணவாள தாஸன் எழுதிய "ஸ்ரீகிருஷ்ணஸ்வாமி தூது" - இசை நாடகத்தை எமது பதிப்பகம் வெளியிடும் பேறு கிடைத்ததை எண்ணி எண்ணி மகிழ்கிறேன். இந்நாடகத்தை காட்சி ஜோடனைகளுடன் அரங்குகளில் அரங்கேற பள்ளிக்கூடங்கள், வானொலி சிறுவர் சங்க அமைப்புகள் முன்வர வேண்டும். அருமையான செந்தமிழில் எளிமையான நடையில் எழுதப்பட்ட இக்காவியத்திற்கு ஸ்ரீகாஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு சங்கராச்சாரிய ஸ்வாமிகளான ஸ்ரீஜெயேந்திர ஸரஸ்வதி சுவாமிகள் ஆசியுரை வழங்கியது நாங்கள் பெற்ற பெரும் பேறு என்று மகிழ்கிறோம். இந்நூலை சிறந்த முறையில் அச்சிட்ட R.S.T. அச்சகத்தார் — திரு. பாலகுமார், திரு. ரவிச்சந்திரன், திரு. பஞ்சாபகேசன், திரு. அருண்பிரசாத் அவர்களுக்கு (R.S.T. பிரிண்டர்ஸ், 5, விஸ்வேஸ்வரபுரம், ஆழ்வார்பேட்டை, சென்னை - 600 018) உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூல் வெளியிட நிதிஉதவி வழங்கிய, திருமலை-திருப்பதி தேவஸ்தான சமய நூல்கள் வெளியீட்டு நிதி உதவிக் குழுவினருக்கு பதிப்பகத்தின் சார்பில் நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

ஆசிரியர்களும், நூலகத்தினரும், தமிழ்ச் சுவைஞர்களும் இந்நூலை வாங்கி, படித்துப் பயனுற வேண்டுகிறோம்.

- பதிப்பகத்தார்

# நன்றியுரை

ஆதியில் அடியேனின் அம்மையப்பனின் ஆசியாலும் ஆசார்யன் எம்பெருமானாரின் பரிபூரண அனுக்ரஹத்தாலும், எழுந்த இந்தசிறு முயற்சிக்கு முகவுரை தந்து கிருபை செய்த ஸ்ரீ காஞ்சிப் பெரியவர் ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகளின் பாதாரவிந்தங்களை என் சென்னியில் சூட்டி வணங்கி மகிழ்கின்றேன்.

இந்நூலை ஆக்க மூலக்காரணமாய் அமைந்து அடியேனின் முன்னேற்றத்தைப் படிப்படியாகக் கண்டு பெருமிதம் அடைந்து பாராட்டி வரும் பெருமதிப்பிற்குரிய என் இதய குருநாதர் திரு. கூத்தபிரான் அவர்களுக்கு நான் என்றும் கடமைபட்டவனாய் இருக்கின்றேன். அன்னாரின் அரும்பெரும் முயற்சியாலும், எனது அனைத்து ஆக்கத்திற்கும் இதமான ஊக்கமளித்து உதவிவரும் இயலாசான் திரு. இராமகதாரத்ன. வி. தியாகராஜன் அவர்களின் ஆசியாலும், இசையாசான் திரு. சேந்தங்குடி ஜெயராமன் அவர்களின் நல்வாழ்த்தாலும் இந்நூல் வெளிவருகிறது என்பதை எண்ணும்போது பேரின்பமடைகின்றேன்.

இந்நூலை அச்சிட்டு வெளியிடப் போதுமான நிதியுதவி அளித்த திருமலா திருப்பதி தேவஸ்தானத்திற்கு என் உளமார்ந்த நன்றியை உரித்தாக்குகின்றேன்.

அடியனுக்கு அனைத்து வகையிலும் துணை நின்று பேருதவி புரிந்து வரும் என் அருமைத் தமிழாசிரியர்கள் புலவர். கோ. பெரியண்ணன், புலவர் தட்சிணாமூர்த்தி ஆகியோருக்கும், அன்பர் திரு. சிவராமகிருஷ்ணன், திரு. கிருஷ்ணமூர்த்தி அவர்களுக்கும், ஸ்ரீ ஆண்டாள் நாட்டிய நாடகம் உருவாக்க காரணமாய் அமைந்த சகோதரி செல்வி. பவானிலக்ஷ்மி அவர்களுக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்!

எனது எழுத்துகள் ஏடாக எழுவதற்கு ஏற்ற முயற்சிகள் எடுத்து, முனைந்து உழைத்த ஆருயிர் நண்பர், சிட்டுக்குருவி பதிப்பகத்தின் இயக்குநர் மறைமலைநகர் எஸ். பாலகிருஷ்ணன் அவர்களுக்கும் என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன். இச்சிறு நூலில் உள்ள நிறை நோக்கி, குறைபோக்கித் தமிழிசை உலகம் கொள்ள வேணுமாய்ப் பிரார்த்திக்கின்றேன்.

நாள்: 31.8.92.

அன்பன்

நங்கநல்லூர் மணவாளதாசன்

ஸ்ரீ சீதா ராமஜெயம்

# "ஸ்ரீ கிருஷ்ணஸ்வாமி தூது"

## (இசை நாடகம்)

### விநாயகர் வணக்கம்

ஹம்ஸத்வனி — ஆதி-திஸ்ர நடை

பெருமை சேர்ந்த பாரதத்தில்
பேசும் நல்ல சிறப்பு ஓங்கும்
அருமை யான ஓரிடமாம்;
அறமுரைக்கும் நல்லிடமாம்;
கிருஷ்ணஸ்வாமி தூதிதனைக்
காட்டும் நல்ல நாடகமாய்
உருவாக உமை மைந்தன்
கரிமுகனைத் துதி செய்வோம்!

### சரஸ்வதி வணக்கம்

பூபாளம் — விருத்தம்

புத்தகம் படிக மாலை கமண்டலம்
ஏந்திக் காப்பாள்;
இத்திரு மண்ணில் எல்லாக்
கலைகளும் ஆக்கும் தெய்வம்!
முத்தமிழ்ப் பாடல் தந்து
முழுமையும் படைக்க வந்து
நித்தமும் அருளும் அன்னை
நாமகள் வணக்கம் செய்வோம்!

## கண்ணன் வணக்கம்

நாகஸ்வராளி

விருத்தம்

ஆர்த்தெழும் கடலின் ஓசை அகண்டுயர் வானின் ஓசை
பேர்த்தெழும் காற்றின் ஓசை பேரிடி ஓசை என்று
ஓரிடம் அன்றி எல்லா ஓசையும் ஒலியும் ஆன
பார்த்தனின் தேர் அசைத்த சாரதி பாதம் போற்றி!

(பாண்டு குமாரர்களாகிய பாண்டவர்களை கௌரவர்கள் வஞ்சகமாக சூதாட்டத்தில் வென்று, பனிரண்டாண்டு வனவாசமும் ஓர் ஆண்டு மறைந்து வாழவும் கட்டளை பிறப்பித்தார்கள். பதின்மூன்று ஆண்டுகாலம் கழித்து முறையாக துரியோதனனிடம் பாண்டவர்களில் மூத்தவரான தருமர் நாடு கேட்க விரும்பினார். அதற்குக் கிருஷ்ணனைத் தூதாகப் போகும்படி வேண்டிக் கொண்டார். பாண்டவர்களுக்காக துவாரகைக் கண்ணன் தூது சென்ற பாங்கை இந்த இசை நாடகம் இயம்புகிறது.)

## நூல் பயன்

ராகம்: ரேவதி

தாளம்: ஆதி

கிருஷ்ண ஸ்வாமி தூது - இதை
கேட்பவர்க்கு துயர் ஏது?

தருமம் தன்னைக் காக்க கண்ணன்
தூதவனாய் வந்தான்!

சத்தியம் வெற்றி பெறவே கண்ணன்
சாரதியாய் நின்றான்!

உலக நலம் வேண்டி கண்ணன்
உண்மை வழியைத் தந்தான்!

பாதகங்கள் நீங்க கண்ணன்
கீதை அருளிச் செய்தான்!

# காட்சி: 1

| | |
|---|---|
| இடம்: | பாண்டவர் இருப்பிடம் |
| பங்குபெறும் பாத்திரங்கள்: | தருமர், கண்ணன், வீமன், அர்ஜுனன், நகுலன், சகாதேவன், திரௌபதி |

(வனவாசமும், அஞ்ஞான வாசமும் முடித்து வந்த பாண்டவர், அடுத்து அவர் செய்ய வேண்டியதை க்ருஷ்ண பகவானுடன் சேர்ந்து ஆலோசனை நடத்தினர். தருமர், முதலில் கண்ணபிரானைப் பார்த்துப் பேசத் தொடங்கினார்.)

ஹேமவதி — ஆதி

தருமர்: ஊசி முனை நிலமுமில்லை
உவந்து நான் அளிக்க என்று
பேசிய சுயோதனன் தன்
கருத்தினைச் சொல்ல முனிவன்
மாசிலா சஞ்சயன் தான்
தூதனாய் வந்துரைத்தான்!
கேசவா உந்தன் எண்ணம்
உரைத்திடு திருச் செவ்வாயால்!

த்வஜாவந்தி — ஆதி

கண்ணன்: உன் எண்ணம் எதுவோ
அதுவே தான் என் எண்ணம்! உனக்கு
வயல் சூழ்ந்த குரு நாட்டை ஆள எண்ணமா?
உயர்ந் தோங்கு தரு காட்டைக் காண எண்ணமா?
புயல் போரில் ஈடுபட்டு வெற்றி வேண்டுமா?
இயல்பாக நீ நினைத்த திங்கே சொல்லு!

அவர் எண்ணம் போர் ஒன்றே!
அதை அறிந்தேன் நன்றே!

(என்று கூறிய பீமன் தருமரை மேலும் சில வார்த்தைகளைச் சொல்லி அவர் தருமத்தை இன்னும் பேசிக்கொண்டு இருப்பது தக்கதல்ல என்று இடித்துரைக்கிறான்.)

திலங் திஸ்ர நடை

வீமன்: மலை போன்ற எந்தன் கதை வலிமை அறியாயோ?
சிலை கொண்ட இந்த பார்த்தன் திறம் பாராயோ??
குலைந்த கருங்கூந்தல் திரௌபதி நிலை தெரியாதோ?
அலைந்த மனம் கொண்டவர்க்கு அடிமை
செயக்கருதினையோ?

திலங் ஆதி

ஐயா! இனிப் பொறுமை அவசியமில்லை!
உய்ய ஒரு வழி உண்டேல் போரே நன்று!
கையாலே யாசித்துக் கேட்பது கூடாது!
மெய்யாலே போர் எண்ணம் வேண்டும்! வேண்டும்!

சாரங்கா விருத்தம்

தருமர்: குருவம்சக் கோமகனே! கொஞ்சம் நீ எண்ணிப்பார்!
ஒரு குலத்துட் பிறந்து வந்த உத்தமராம் நமக்குள்ளே
இரு நிலத்துக் காரணமாய் இரண்டுபட்டோம்
என்கின்ற
பெரும் பழியைப் பெறுவதினால் பெறுவது நாம் யாது?
உரை!

(என்று சொன்ன தருமர் மேலும் சிலவற்றைச் சொல்லத் தொடங்கினார்.)

சாரங்கா ஆதி

தருமர்: நிலத்திற்கு ஆசை கொண்டு
நீண்ட நம் பெருமை கொண்ட
குலத்தினைப் பகை கொள்ளத்தான்
குறிப்பது பண்பே அல்ல

நலம்பல விளைக்கும் ஒன்றாய்
நாம் இங்கு வாழ்ந்தால்! இன்னும்
கலங்கிய குட்டை போல
வாழ்வது கெட்டத் தன்மை!

சாரங்கா விருந்தம்

கண்ணில் நமது கைபட்டால் கைவிரலைக் களைவதில்லை!
எண்ணுகையில் அவர் நமக்கு நம் விரலே போலானார்!
மண் தரவும் மறுத்தாலே பின் அதனைப் பேசிடுவோம்!
கண்ணனவன் முன்னிருக்கக் கண்டும் துயர் காணுவதோ!

வீமன் வசனம்:

அண்ணா! தரும ராஜனே! நான் சொல்வதை தயவு செய்து கேட்பாய்!

ஹம்ஸத்வனி விருத்தம்

வீமன்: அவ்வாறாயின் யானே தூதாய்
அடைவன் அத்தி னாபுரம் இன்றே!
செவ்வாய்க் கண்ணன் நடந்து தூதாகச்
செல்லல் வேண்டாம் சொன்னேன் நன்றே!

வீமன் வசனம்:

அண்ணா! துளஸி மாலையணிந்த ஸ்ரீ கிருஷ்ணன் தன் செங்கால்கள் சிவந்து போகும் படித் தூதாக நமக்காக செல்ல வேண்டாம். திரௌபதியின் சபதமும், என் சபதமும் நிறைவேற என்னைத் தூதாக அனுப்பு!

(வீமனின் இந்த வசனத்தைக் கேட்ட தருமர் பேசாமல் இருந்தார். கண்ணன் குறுக்கிட்டு பீமனின் சினத்தைத் தணித்தார்.)

பூர்வி கல்யாணி ஆதி

கண்ணன்: சினம் விடு வீமனே! முனம் பிறந்தார் தருமர்!
நினைந்து ஒன்று சொன்னால் கேட்டல் வேண்டும்
உனை நான் நன்கறிந்தேன்! உன் கருத்தும் நன்று!
மனைத் தலைவன் தருமன் மொழிவது கேள் ஐயா!

ஆரபி ஆதி

தருமர்: போர் செய்ய விரும்பினரோ
குருக்ஷேத்திரத்தில் _ கௌரவர் (போர் செய்ய)

முன்னே நாம் யுத்தம் செய்ய
முடிவு செய்யக் கூடாது!
இன்றே நம் உரிமை நாட்டைக்
கேட்டிடுவோம் - அதற்கு
கண்ணனே உன் கருத்தை உரைப்பாயே!

(புன்சிரிப்புடன் கண்ணன் தன் ஆசனத்திலிருந்து எழுந்து வந்து சொல்லத் தொடங்கினார்.)

ஆபோகி ஆதி

கண்ணன்: போருக்குப் போக வேண்டும்!
தருமராஜனே - உம்மை
வஞ்சகமாகவே சூதாடி
வென்றவன் நிலந்தர மறுத்தால் மறுநாளே
(போருக்குப்)

சுபபந்துவராளி ஆதி-திஸ்ர நடை

தருமர்: உற்றாரை எங்கள் உயிர் சகோதரரைப்
பெற்றாரை பெருமை தந்த கற்றாரை (பெரியோரை)
குருகுலத்து மற்றாரை
கொல்ல உள்ளம் தயங்குது கண்ணா!
சற்றே பொறு! இந்த
செகம் ஆள ஆசையில்லை! முற்றும் அறிந்தவா!
எனக்குக் கானக வாழ்வினிது!
கானக் குழலோசைக் கண்ணா!

(என குற்றமில்லா தருமராஜன் கூற அதற்கு மாமாயன் கண்ணனும் மறுமொழி சொன்னான்.)

ஹிந்தோளம் மிஸ்ரசாபு

கண்ணன்: தருமரே! நீர் நினைத்தது தவறானது - இந்த
உலகம் உம்மைப் பழித்துப் பேசும்!
சொன்ன சபதம் தவறினால் - அது
தருமமோ? தக்கதோ? சொல்லுவீர்!

(தருமர் சிறிது நேரம் யோசித்த பிறகு கண்ணனிடம் தூது போக வேண்டி தன் எண்ணத்தைக் கூறினார்.)

சாமா ஆதி

தருமர்: எமக்காக நீ தூது போக வேண்டும்!
நமக்கென நாடு ஒன்று கேட்க வேண்டும்!
அமைகின்ற நன் நாட்டைத் தாரான் என்றால்
இமைப் பொழுதில் ஐந்தூர்கள் கேட்க வேண்டும்!
உமக்கெதற்கு ஐந்தூர்கள் என்றானாகில்
இன்பமாக இருக்க ஐந்து வீட்டை வேண்டு!
அதையும் தர மறுத்தால் போர் வேண்டு!
கண்ணா போர் வேண்டு!

## வீமனின் சினம்

மோஹனம் விருத்தம்

வாயு புத்திரன் சினந்தான் - அவன்
வருவது போரே வாய்க்க
வேணு மென்று கனன்றான்!

சிவரஞ்சனி ஆதி

வீமன்: அலங்கு அரசரும் வீடுமர் துரோணரும்
நலஞ்செய் விதுரர் கிருபர் போன்றோர்
துலங்கி அவையில் இருக்க திரௌபதி
குலுங்கி அழுத்துகில் குறைத்த நாளினில்
கலங்கி நின்றோம்! இன்றும் கலங்குகின்றோம்

(பிறகு காண்டீபம் என்னும் வில்லைக் கொண்டவனான அருச்சுனன் ஸ்ரீ கிருஷ்ண பகவானையும் தருமரையும் வணங்கி பின்வருமாறு பேசினான்.)

அர்ஜுனன் வசனம்:

அண்ணா! வயல் சூழ்ந்த இந்த குரு நாட்டிற்குத் தலைவனாக விளங்கக் கூடிய நீ கேவலம் துரி-யோதனனிடத்தில் யாசிப்பதா?

மோஹனம் ஆதி

அர்ஜுனன்: இடித்து கதையால் ஒடித்து தேரைப்
பிடித்து பிளந்து எறியும் போரில்
துடித்து இறந்த கௌரவ சேனை
மிதித்து வரும் நாள் பார்க்கிறேன்!

அன்று துரோபதை துகில் உரிந்தவர்
இன்று போரினில் மாள்வது நீதியே! - என
துடிக்கும் என் மனம் காண்பீர் - இனி நாண்
வெடிக்கும் வில் ஒலி கேட்பீர்!

விருத்தம்

ஐயனே கேள்! இங்கு எமக்காக
நீ தூது போனாலும் துர்புத்தி துரியோதனன்
கேளான் - அறிவாய் கண்ணா!

(என்று கண்ணனைப் பார்த்துக் கூறிய அர்ஜுனன் மீண்டும் அண்ணனைப் பார்த்துக் கூறுகிறான்.)

ஸ்ரீ ரஞ்சனி ஆதி

எந்தன் அண்ணா! களர் நிலத்தில்
நல்ல விதை விதைத்தாலும் விளையாது!
பால் கொடுத்து வளர்த்தாலும்
பாம்பின் விஷம் மாறாது!

ஆதலால் அவனோடு போர் செய்தல் நலமாகும்
அறிவீர் அண்ணா!

(அர்ஜுனன் இவ்வாறு கூறி முடிக்க பின்னே நகுலன் எழுந்து கண்ணபிரானைத் தொழுது தன் கருத்தைச் சொல்லலானான்.)

கல்யாணி ஆதி

நகுலன்: குன்று ஒன்று ஏந்தி வந்து
பசுக்கூட்டம் தன்னைக் காத்து
நின்ற நீதிக் கண்ணனே!
எங்கள் மாய வண்ணனே!
இன்று தூதுக் காகவே
நீயும் நன்று போகவே
என்றும் நன்மை இல்லையே
இரக்கம் அவர்க்கு இல்லையே!

விருத்தம்

வனவாசம் பன்னிரண்டாண்டு
மறைந்து வாழ ஒரு வருடம் - என
ஏவல் கொண்ட நாமும் ஏற்றதை முடித்து இன்று
ஆவலோடு நாட்டைப் பெற
ஆசையோடு செல்லுகையில்
இல்லை நிலம் ஊசி முனை
என்று அவன் சொல்ல இன்று
கண்ணன் போகக் கொடுப்பனோ?

நகுலன் வசனம்:

கோவர்த்தன மலையைக் கையில் ஏந்தி பசுக்களைக் காத்த கண்ணபிரானே தூதாகச் சென்றாலும் குருநாட்டையும், அரசையும் அத்துரியோதனன் கொடுக்கமாட்டான்

(என்று நகுலன் தன் கருத்தைக் கூற கண்ணபிரான் சகாதேவனின் எண்ணத்தையும் அறிய விரும்பி அவனைத் தனியே அழைத்துச் சென்றார்.)

கண்ணன் வசனம்:

சகலகலை சாஸ்திரங்கள் கற்றுணர்ந்த சகாதேவனே! உன் மேன்மைக்கு இணையானவர் இவ்வுலகில் எவரும் இருக்க முடியாது. நீ இந்தப் போரை நிறுத்த நல்ல உபாயம் சொல்லுவாயானால் அதை நான் ஏற்று நீ சொன்னபடியே செய்கிறேன்.

கண்ணன்: சாத்திரம் கற்றுணர்ந்த சகாதேவ மணியே கேளாய்!
ஆத்திரம் ஒன்றுமட்டும் அழிவினைத் தேடும் என்னும்
சூத்திரம் உணர்ந்த உந்தன் கருத்தினைச் சொல்லு - அதை
மாத்திரம் கேட்டவ்வாறே செய்கின்றேன் என்றான் கண்ணன்

(கண்ணபிரான் கூறியதைக் கேட்ட சகாதேவன் தன் கருத்தைச் சற்றும் தயக்கமின்றி வெளியிட்டான்.)

மாண்டு ஆதி

சகாதேவன்: தூது நீ போனால் என்ன? போகாது விட்டால் என்ன?
மாது அந்த துரோபதை கூந்தல் முடித்தால் என்ன?
பாதகன் துரியோதன் நாடு கொடுத்தால் என்ன?
மீதமின்றி எடுத்தால் என்ன? யாது நானும் சொல்லுவேனே!

விருத்தம்

எல்லாம் அறிந்தாய்! எதுவும் தெரிந்தாய்!
வல்லாய் உனக்கு இது விளையாட்டே!
பொல்லாச் செயல்கள் தன்னால் போரை
நில்லச் செய்ய நீயறியாயோ?

சகாதேவன் வசனம்:

முக்காலமும் நன்குணர்ந்த ஸ்ரீ கிருஷ்ண பகவானே! நீர் அறியாதது ஒன்றில்லை! அன்றியும் நான் உமக்கு உபாயம் சொல்லுமளவிற்கு உயர்ந்தவனில்லை! இப்போரை நிறுத்துவதற்கு உண்டான வழியை நீரே அறிவீரே!

கரஹரப்ரிய விருத்தம்

கண்ணன்: அறிவேன்! ஆனால் உபாயம் ஒன்று
அளித்திடுவாயேல் ஏற்பேன் நன்று!
தெளிவாய் உந்தன் கருத்தைச் சொல்லு!
எளிதாய் நானும் ஏற்றுக் கொள்ள!

(சகாதேவன் கண்ணனின் வேண்டுகோளுக்கிணங்க தன் கருத்தைக் கூறலானான்.)

சாரமதி ஆதி

சகாதேவன்: உன்னையல்லால் ஒருவர் உண்டோ? - இந்த
பாரதப் போரை நிறுத்திடவே - இங்கு (உன்னை)

பூமி பாரம் தீர்த்திடவே - இங்கு
பாரதப் போரை ஆக்கிடவே
புகுந்தாய் உலகில் புயல் வண்ணா - உன்னைப்
புரிவார் யாருளர்? சொல் கண்ணா! (உன்னை)

யோசனை கூறிட வேண்டும் நான் என்று
பேசினை; அதனால் உரைக்கின்றேன்!
மாசிதில் இருப்பின் மன்னிப்பாய் - எமன்
பாசம் அணுகாமல் காத்திடுவாய்!

கண்ணன் வசனம்:

சகாதேவ! உன் எண்ணத்தில் உள்ளதை தைரியமாகச் சொல்!

மோஹனம் விருத்தம்

சகாதேவன்: கர்ணனுக்கு எதிரி அந்த அருச்சுனனைக் கொல்ல வேண்டும்!
களைய வேண்டும் திரௌபதியின் கார்மேகக் கூந்தலினை!

அடுத்து உனை விலங்குகளால் கட்டிவிடல் வேண்டும் - இனி

தடுத்திடலாம் தருமதுரி யோதனர் போர் தானே!

கண்ணன் வசனம்:

(சிரித்துவிட்டு) சகாதேவா! நீ சொன்னபடியே செய்துவிடலாம்! ஆனால் மூன்றாவதாக ஒன்றைச் சொன்னாயே! அதான் என்னைக் கட்டுகிறேன் என்று! அது எப்படி சாத்தியமாகும்?

சகாதேவன் வசனம்:

என்னால் உன்னைக் கட்டுவது எளிது கண்ண
பெருமானே!

மலையமாருதம் விருத்தம்

முன்னம் நீ சொன்ன இரண்டையும் முடித்திடலாம்;
என்னை நீ கட்டுவது எவ்வாறு என எழுந்து
பேருருவைப் பெற்று நின்றான் கண்ணதேவன் - அவன்
பெயரை மட்டும் சொல்லி நின்றான் சகாதேவன்!

(கண்ணன் தன் விஸ்வரூபத்தைக் காட்டியவனாய் நிற்க, சகாதேவன் கண்ணனின் திருநாமத்தை மனதிற்குள் உச்சரித்தவனாய் வெகு நேரம் கண்ணை மூடித் தியானம் செய்தான். கண்ணபிரான் மனமிரங்கி அவனின் அசையாத பக்தி என்னும் கயிற்றில் கட்டுண்டவராய் தன் சுய உருவை அடைந்து சகாதேவனைப்பலவாறு பாராட்டி வாழ்த்தி வரமளித்தார்.)

சங்கராபரணம் ஆதி

கண்ணன்: பக்தியினால் கட்டிவிட்டாய்! - சகாதேவா என்னை
(பக்தியினால்)

இக்கணத்திலே பேருரு கொண்ட பின்
அக்கணத்திலே அன்புடன் கூடிய (பக்தியினால்)
மெச்சினேன் உன்னை மெச்சினேன் - ஏதும்
அச்சமிலாமலே அச்சுதன் என்னையே (பக்தியினால்)
சகாதேவ உனக்கு சகாயம் பண்ணவே - என்
அகமெலாம் மகிழ வரம் ஒன்று கேட்டிடு!

(கண்ணனின் வாழ்த்துரையில் மயங்கி உளம் பூரித்த சகாதேவன் பாரதப் போரில் தங்கள் ஐவரையுங் காப்பாற்ற வரம் வேண்டினான்.)

கௌளை ஆதி

சகாதேவன்: ஐவரையுங் காத்திடு ஐயனே! - எங்கள் (ஐவரையுங்)

மெய்யாலே எங்களுக்கு நீ துணை நின்று (ஐவரையுங்)

பாரதப் போரிலே பக்கத்தில் இருந்து நீயும் (ஐவரையுங்)

அச்சுதனே எங்கள் அருகில் அருள் செய்து (ஐவரையுங்)

வசனம்:

ஸ்ரீ கிருஷ்ண பகவான் இவ்வாறு சகாதேவனுக்கு வரம் அளித்து நமக்குள் நடந்த இந்த விவாதத்தை யாரிடமும் சொல்லாதே எனச் சொல்லி அங்கிருந்து அகன்றார். பிறகு திரௌபதி சில வார்த்தைகளைச் சொல்லத் தொடங்கினாள்.

ஹம்ஸத்வனி ஆதி

திரௌபதி: பற்றினான் என் முடி பற்றினான்!
கற்றறியாதவன் துச்சாசனன்!

பற்றியே சபை கொண்டு வந்தென் துகில்
பற்றினான்! அவன் பாழ் இரத்தம்
பற்றி என் கூந்தலில் பூசிப்பின்
முற்றுவேன்! சபதம் முற்றுவேன் - அது
ஆற்றவே உன் உதவி வேண்டுமே! - அதற்கு
போர் சங்கு ஊதிட வேண்டுமே!

கல்யாண வஸந்தம் ரூபகம்

துடைத்தான் கண்ணன் த்ரோபதையின் கண்ணீர்!
துடைப்பேன் உன் கவலை உடைப்பேன் அவர் உறவை!
முடிப்பேன் உன் கூந்தல் யானே! - இனி
படைப்பேன் கீதையை நானே - என்று

விடைத்தான் கொண்டான் விரைந்து தேர் மீதேறி
அடைந்தான் தூதுவனாய் அத்தினாபுரமே!

## காட்சி: 2

இடம்: அத்தினாபுரம்
பங்கு பெறும் பாத்திரங்கள்: துரியோதனன், சகுனி

(துவாரகைக் கண்ணன் அத்தினாபுரத்தை அடைய அந்நகர வாசிகள் கண்ணன் வருகையால் உள்ளம் களித்து, நகரத்தை அழகு செய்தார்கள்.)

சங்கராபரணம்

மின்னும் மாமணித் தோரணம் கட்டினர்!
பொன்னில் நல்லணி பொலிய அமைத்தனர்!
என்ன என்ன அலங்காரம்
எங்கள் கண்ணன் வருகைக்கு!

ஹரிகாம்போதி விருத்தம்

கண்ணனே தூதுவன் என்றறிந்த துரியோதனன்
எண்ணத்தில் எதிர்க்க எண்ணி ஓடினான் - முன்னமே
உண்மைக்கு எதிரியாம் சகுனி அங்கு ஓடி வந்து
வண்ண நில்லென்று விலக்கி விட்டான்!

(துரியோதனனை விலக்கிய சகுனி அவனுக்கு ஆத்திரப்படக்கூடாது என்று அறிவு புகட்டினான்.)

புன்னாகவராளி ஆதி

சகுனி: அல்லடா சுயோதனா!
அறிவு கெட்டுப் போச்சோ!
வருவது கிருஷ்ணன்
அவனை எதிர்த்தால்
பகை நமக்கு ஆச்சோ?

திலங்

ஆதி

துரியோதனன்: மாமனே! என்னை மன்னித்து விடு! - அந்த
வீமனுக்காகவே வந்த கண்ணன்
பரந் தாமனே ஆயினும் பயமெனக்கில்லை - போர்
ஆமெனச் சொல்லிடப் பாண்டவர்க்கு!

பானுமதி

விருத்தம்

சகுனி:

பொறு மைந்தா! அந்த த்வாரகைக் கண்ணன்
வருவது ஏனென்று அறிய வேண்டும்!
சிறு கோபமும் கொண்டு தூதுவனை
வெறுத்துப் பேசுவது வீண் வம்பு!

(என்று சகுனி துரியோதனனுக்கு பல சமாதானங்களைக் கூற அவனும் சீற்றம் அடங்கி விலகிச் சென்றான். அத்தினாபுரத்திற்கு எழுந்தருளிய கண்ணன் துரியோதனன் இருக்கும் இடத்தை அடையாமல் விதுரராஜன் வசிக்கும் நன்மனையை அடைந்தார்.)

## காட்சி: 3

இடம்: விதுரர் மாளிகை
பங்கு பெறும் பாத்திரங்கள்: விதுரர், கண்ணன்

(கண்ணன் விதுரரின் மனை அடைந்தார்)

கமாஸ்

ஆதி

மதுரகீதம் பாடும் அரண்மனை
எதிர்எதிர்த் தீபம் எரியும் அரண்மனை
சதிகாரன் துரியோதனன் அரண்மனை அடையாமல்
விதுரராஜன் வசிக்கும் தன்மனையை
பதுமநாதன் கண்ணன் சென்றடைந்தான்!

**கண்ணன் வசனம்:**

அத்தினாபுரத்தை அடைந்து விட்டோம்! இப்போது நான் யார் இல்லத்திற்கு முதலில் செல்வது? ம்! விதுரர் மாளிகைக்கே முதலில் செல்வோம்!

(கண்ணன் இவ்வாறு யோசனை செய்துவிட்டு விதுரராஜன் மாளிகையை அடைகின்றார்.)

கமலாமனோஹரி — திஸ்ரம்

நவரத்ன ஆசனம் தந்து நந்த கோபாலனை
உபசாரம் செய்து வணங்கினான் விதுரன்
பாற்கடல் நாரணனே நாடி வந்தது போல்
ஆற்றா இன்பம் அடைந்து விட்டான்!

(கண்ணனின் வருகையால் விதுரர் செய்வதறியாது மகிழ்ச்சி வெள்ளத்தால் பலவாறு பரவசமடைந்தார்.)

யமுனா கல்யாணி — ஆதி

விதுரர்: என்ன தவம் செய்ததய்யா - என்குடில்
வண்ண நின் வரவுக்கு (என்ன)

சின்னவன் நானே!
செய்வதறியேனே (என்ன)

கண்ணனே மலையெடுத்து
மக்களைக் காத்தவனே!
மன்னனே துவாரகைக்கு
மாமணியே நீ வர (என்ன)

(தன்னை நாடித் தன் அரண்மனையை தேடி வந்த கண்ணனை உள்ளே அழைத்து உபசாரம் செய்து அவரது பரிவாரங்களுக்கும் உணவு சமைக்கச் செய்து அளித்து மகிழ்ந்தார் விதுரர். கண்ணனுக்கு நல் விருந்து அமைத்து உண்ண வைத்து பொன் ஆசனத்தில் அமரச் செய்தார். கண்ணன் அத்தினாபுரம் வந்த காரணத்தை அறிய விரும்பினார்.)

மாயாமாளவ கௌளை

விருத்தம்

தனி இங்கு வந்ததற்குக்
காரணம் என்ன என்று
இனிமையான சொல்லால்
கேட்டார் விதுரரும்

அம்ருதவர்ஷிணி

ஆதி

விதுரர்: கண்ணனே கவலை தீர்க்கும்
வண்ணனே இந்நாட்டிற்கு
வந்ததன் நோக்க என்ன? - உந்தன்
எண்ணமும் அறிய அடியேன்
எண்ணினேன் எளியேன் என்றார்

மாயாமாளவகௌளை

ஆதி

கண்ணன்: காட்டிலே காலத்தைக் கழித்தார் - இன்று
நாட்டிலே தன்பங்கு பெற்றிடப் பாண்டவர்
கூட்டி என் உதவியால் நல்ல குருநாட்டைக்
கேட்டிடத் தூதாய் அனுப்பினர் வந்தேன்!

கண்ணன் வசனம்:

விதுரரே! முறைப்படி வனவாசம் முடித்து வந்த பாண்டவர்க்கு முறையாக நாடு கொடுப்பது தானே நியாயம்! அதைக் கேட்கத்தான் இப்போது தூதாக வந்திருக்கிறேன்.

தோடி

விருத்தம்

விதுரர்: வந்தது சரியே வாசுதேவனே! - ஆனால்
பொந்துக்குள் வாழும் பாம்பின் கொடி கொண்ட
அந்தப் பாதகன் துரியோதனன் இந்த குருநாட்டைத்
தந்து விடமாட்டான் பாண்டவர்க்கு; உணர்வாய்!

வீணாவாதினி ஆதி

கண்ணன்: பங்கு கொடாமல் போயினன் ஆயின்
சங்கினை ஊதிடுவேன்! - பாஞ்ச
சங்கினை ஊதிடுவேன்!

பொங்கு பெருங்கடல் போரினை ஆக்கியே
பங்கினைப் பெற்றிடுவேன் - பாண்டவர்
பங்கினைப் பெற்றிடுவேன்!

(என்றவாறு க்ருஷ்ண பகவான் விதுரனிடத்திலே விவாதித்துக் கொண்டிருக்க அன்றைய பகல் பொழுது போய் எங்கும் இருள் சூழ்ந்தது அன்று இரவு விதுரன் மாளிகையிலேயே தங்கி ஓய்வு எடுத்துக் கொண்ட கண்ணன் மறுநாள் தேரின் மீதேறி அரச சபைக்குச் சென்றார் அன்று அரசசபை மிகுந்த கோலாகலத்துடன் அலங்கரிக்கப்பட்டிருந்தது )

## காட்சி: 4

| | |
|---|---|
| இடம்: | துரியோதனன் அரண்மனை |
| பங்கு பெறும் பாத்திரங்கள்: | துரியோதனன், கண்ணன், விதுரர், பீஷ்மர், கர்ணன் |

சித்தரஞ்சனி ஆதி

கங்கை புத்திரர் பீஷ்மரும்
வேதம் கரைகண்ட துரோணரும்
சிங்கம் போன்ற பல வேந்தரும்
சீரிய வலிமைச் சேனையும்
மங்கையர் மற்றுள்ளோர் யாவரும்
மறை நூல் வல்ல அந்தணரும்
தங்கையர் - தம்பியர் மேவியே
தங்கியிருந்த சுயோதனன்
பொங்கிடும் ஆவலில் நின்றனன் - அங்கு
திங்களாய் கண்ணன் வரவு காணவே!

சுத்த தன்யாஸி திஸ்ரம்

அவையோர் கூற்று: ஏன் வரப் போகின்றான் என்றனர்!
எப்போது எப்போது என்றனர்

இப்போது காண் என்று சொற்றனர்
அப்போது எழுந்தனன் துரியோதனன்
தப்பாது வருவான் கண்ணனே - வணக்கம்
செப்பாதிருப்பீரேல் பிழைப்பீர் என
ஒப்பாது பேசினன் அவையிலே!

துரியோதனன் சீற்றம்

ஹம்ஸத்வனி விருத்தம்

அவையோரே! நன்றாய் கேளும்
இடையவன் கண்ணன் வந்த உடனே
கைகூப்பி வணக்கம் செய்தால்
மெய்யாலே தண்டனை தருவேன்!
எனச் சீறி எழுந்தனன்!
எரியும் நெருப்பாய் துரியோதனன்!

கண்ணன் வருகையும் அவையோர் செயலும்

சஹானா ஆதி

ஐயன் கண்ணன் அவைக்கு வந்தான்
மெய்யால் அவையோர் கைகள் எல்லாம்
மெல்லத் தலைமேல் தாமறியாமல்
குவிந்தன கண்ணன் குறுநகை செய்தான்!

(துரியோதனன் மட்டும் கண்ணனுக்கு மரியாதை தராமல் நின்று கொண்டிருந்ததைக் கண்ட கண்ணன் தானே நேராக வந்து தனக்கென இடப்பட்டிருந்த ஆசனத்தில் அமர்கிறார். பிறகு துரியோதனன் எழுந்து கண்ணனைப் பார்த்துப் பேசத் தொடங்கினான்.)

ஹம்ஸநாதம் திஸ்ரம்

துரியோதனன்: இன்று எம் மாளிகை வந்த கண்ணா!
என்னை நீ பாராது விதுரரின் வீட்டில்
முன்னே நீ சென்றதும் ஏனோ? அது
முறையெனில் விடை தருவாயோ?

*(கண்ணன் புன்சிரிப்புடன் துரியோதனனைப் பார்த்துக் கூறத் தொடங்கினார்.)*

தேவ்ஷ் ஆதி

கண்ணன்: உன் வீடு என்வீடு என்றெனக்கு பேதமில்லை!
முன்னே எனை அழைத்து விருந்து தந்தார் விதுரர்
நன்றே என நானும் சென்றேன்! - உன்முன்
இன்றே தூதுவனாய் நின்றேன்!

துரியோதனன் வசனம்:

ஹா! வேந்தன் நானிருக்க, என் மாளிகைக்கு முதலில் நீ எழுந்தருளாமல் விதுரன் வீட்டில் உனக்கு என்ன வேலை! சரி! அது போகட்டும்! இப்போது நீ இங்கு வந்ததன் காரணம்! ...

ஹம்ஸத்வனி விருத்தம்

துரியோதனன்: காரியம் ஏதென்று சொல்வாய்! - நீ வந்த
காரியம் ஏதென்று சொல்வாய்!

*(கண்ணபிரான் துரியோதனனிடம் தாம் அத்தினாபுரத்திற்கு வந்த காரணத்தைக் கூற ஆரம்பித்தார்.)*

ஹம்ஸாநந்தி ஆதி

கண்ணன்: அரசை இழந்தார் சூதாடியதால்!
அதனால் அடைந்தார் வனவாசம்!
குறித்த நாள் கழித்து வந்தனர் அவர்க்கு
உரித்த பூமியை உவந்து நீ அளித்திடவே
தரித்தேன் தூதவனாய் வேடம் நானே!
துரியோதனனே தந்திடுவாயே!

(கண்ணனின் வார்த்தைகளைக் கேட்ட அவையோர்கள் என்ன நடக்குமோ என்ற அச்சத்தால் தலை குனிந்து நின்றனர்! கண்ணன் அவையோர் அனைவரையும் பார்த்தவாறு மீண்டும் கூறத் தொடங்கினார்.)

ஹம்ஸாநந்தி விருத்தம்

கண்ணன்: மேலும் ஒன்று சொல்லுவேன்!
ஆலமரம் ஆகி நின்ற குருகுலத்து மைந்தர் நீங்கள்!
பாலமாக இணைந்து நன்மை
பண்ணி வாழ வேண்டும் - அது
சீலமாகும் உங்களுக்கு சிந்தை கொள்ளுவாய் - இந்த
போரைத் தள்ளுவாய்!

(என்றவாறு துரியோதனனுக்கு பலவிதமான அறிவுரைகளைக் கூறி பாண்டவர்க்கு உரிமையான பங்கினைக் கேட்டார் ஸ்ரீ கிருஷ்ண பகவான். அதற்கு துரியோதனன் ஒரு உளுந்தளவு நிலமும் தர முடியாது என மறுத்து விடுகிறான்.)

அடாணா ஆதி

துரியோதனன்: உரிமையை இழந்து பின்பு
உபாயத்தால் ராஜ்ஜியத்தைப்
பெறுதல் எண்ணி வந்தாய்!
அது அவர்க்கு எளிதோ?
திரிவார் இன்னும் காட்டில்!
இடமில்லை இந்த நாட்டில்
பரிந்து ஓர் உளுந்தளவும்
பகிர்ந்திடேன் நிலத்தை!

அடாணா விருத்தம்

நீயெனை வெறுத்தாலும் நேராக ஒறுத்தாலும்
தீயெனத் தேவரும் மன்னரும் பழித்தாலும்
ஆயவர் சபதங்கள் பொய்யெனச் சிரித்தாலும்
ஈயிருக்கு மிடமும் நான் ஈந்திட மாட்டேன்!

(இப்படிப் பேசிய துரியோதனனிடம் மீண்டும் கேட்கலானார் கண்ணபிரான்.)

கண்ணன் மீண்டும் கேட்டல்

பைரவி மிஸ்ரசாபு

ஆயின் அவர்க்கு நீ ஐந்து ஊர் கொடுப்பாய் என்று
ஆய் குலத்துக் கண்ணன் சொல்ல அதனையும் மறுத்தான்!
ஆனதை எண்ணி அவனைப் பார்க்கவும் வெறுத்தான்!
- கண்ணன்
தானமாய் ஐந்து வீடு வேண்டினான் மீண்டும் கேட்டான்

(ஊசிமுனை நிலமும் உவந்து கொடுக்க மாட்டேன் என்ற துரியோதனனுக்கு கண்ணன் மறுமொழி கூறும் வகையில் அவனிடம் ஐந்து ஊர் வேண்டினார். துரியோதனன் மறுக்கவே, தானமாக ஐந்து வீடு வேண்டினான். அதையும் கொடுக்க மறுக்க கண்ணன் ஏதும் பேச முடியாமல் கேட்க முடியாமல் நின்ற சமயத்திலே துரியோதனன் கண்ணனைப் பார்த்து விதுரரைப் பழித்துப் பேசினான்.)

வீணாவாதினி விருத்தம்

துரியோதனன்: வீரர்க்கே சொந்தம் இந்த
விளைநிலம் எல்லாம் அன்றி
பாண்டவர்க்கு ஏதுக்கையா? - இதை
வேண்டத்தான் வந்தீரோ நீர்!
வீரமில்லா விதுரர் வீட்டில்
முன்வந்து அன்னம் உண்டாய்
ஈரமெனும் அவர்க்கு உண்டோ?
எம்மைச் சார்ந்து எமக்கு எதிரியானார்!

(துரியோதனனின் அவச்சொல்லைக் கேட்ட விதுரருக்கு ஆவேசம் பொங்கி எழ அவை நடுங்கும்படி பேசத் தொடங்கினார்.)

ஆனந்தவல்லி ஆதி

விதுரர்: என்ன பேசினாய் சுயோதனா! - இதை
சொன்ன உன் தலையை வெட்டி சாய்க்க வேண்டும்!
(என்ன பேசினாய்)

சின்ன மதி கொண்டு
மன்ன வனாம் என்னை

(என்ன பேசினாய்)

பெருமை கொண்ட அந்த பாண்டவர் தூதனாய்
வந்த கண்ணனுக்கு விருந்து தந்த என்னை

(என்ன பேசினாய்)

வேசிமகன் என்று ஏசினை எனக்கு
தூசி நீயென்று சொல்லவும் வேணுமோ?

(என்ன பேசினாய்)

அறுத்து தலைதனை வெட்டி வீழ்த்துவேன்!
அரசன் நீயென (சினம்) ஆறி நிற்கிறேன்!

(என்ன பேசினாய்)

எதிரியாகிலும் தேவராகிலும் - இந்த
விதுரனைப் பழி பேசினர் இலர் - நீ

(என்ன பேசினாய்)

சொல்லிரண்டினிச் சொல்லலேன் - இந்த
வில்லிற போரினிற் செல்லலேன்!

(என்ன பேசினாய்)

பூபாள ஸ்வரம் — விருத்தம்

விதுரர்: ஒடிப்பேன் என் வீர வில்லினை - இனி
அம்புகள் தொடுத்தல் இன்றியே!

(என்று சினந்து கூறிய விதுரர் தன் கையில் இருந்த வில்லை இனி போர் புரிய மாட்டேன் என்று சபதம் செய்து இரண்டாக ஒடித்துப் போட்டார். அதைக் கண்ட பீஷ்மர் எழுந்து சில வார்த்தைகளைச் சொன்னார்.)

தர்மவதி — விருத்தம்

பீஷ்மர்: வில்லாளி விதுரன் தன்னைச்
சொல்லாலே சுட்டு விட்டாய்!
நில்லாது உன் பெயர் உலகில்
வெல்லாது உன் அரசாட்சி!

தேவகாந்தாரி

ஆதி

துரியோதனன்: விதுரரை விட்டால் வீரர் வேறில்லையோ போரிட

எதிரிகள் பதறி ஓட அம்பெய்யும் கர்ணன் வில்லால்
அதிரும் அப்போர்க் களமும் அதை அப்போது காண்பீர்!
மதி கெட்டுப்போக நானும் மந்தி போல் ஆகவில்லை!

விருத்தம்

பீஷ்மரே நீர் துணை உண்டு - பிதாமகர்
பீஷ்மரே நீர் துணை உண்டு! - மேலும்
துரோணரும் கிருபரும் அஸ்வத்தாமனும் அருகிருக்க
விதுரர் எனை வெறுத்தால் என்ன?
வில்லொடித்துப் போர் செய்ய மறுத்தால் என்ன?

(துரியோதனன் இவ்வாறு கூறியவுடன் அங்க தேசத்து அரசன் கர்ணன் தானும் சில வார்த்தைகள் பேச, அதற்குப் பிதாமகர் பீஷ்மர் பதிலுரைத்தார்.)

சக்ரவாகம்

ஆதி

கர்ணன்: எனை விட்டால் யாரிக்கிறார்கள் - அந்த
அருச்சுனனை எதிர்த்திட - இங்கு (எனை விட்டால்)

கணை ஒன்று தொடுத்திட்டால்
கண் முன்னே யாரிருப்பார்! நாகக்
கணை ஒன்றும் உண்டு! என் வன்மைக்
கிணை என்றும் உண்டோ? (எனை விட்டால்)

(தேவ லோகத்தில் இருக்கும் கற்பக மரமே நாணும்படியான கொடைத் தன்மை பொருந்திய கர்ண மகராஜன் இவ்வாறு சொல்ல அதற்கு பீஷ்மரின் பதில்.)

பேகடா ரூபகம்

பீஷ்மர்: தேவர்க்கு அரசைத் தந்து
தெய்வ பலம் பெற்று வந்த
யாவர்க்கும் அச்சம் செய்யும்
காண்டீப வில்லைக் கொண்ட
பார்த்தனாம் அருச்சுனனைப்
பகைத்தவன் உலகில் இல்லை!
யாரிடம் பேசுகின்றாய்
கர்ணா உன் வலிமை பற்றி!

சாவேரி ஆதி

கர்ணன்: ஈசனே ஆயினும் எதிர்த்திடுவேன் - இந்த
வாசவன் ஆயினும் வில் வளைத்திடுவேன்!
தூசெனக் காமந்த பாண்டவர்கள்! போர்
மீச்செலத் திரும்பார் மீண்டவர்கள்!

(இதைக் கேட்ட அவைப் பெரியோர்கள் இந்த ராஜ்ஜியத்திற்கு அழிவுக்குறி வந்ததென ஏதும் பேச முடியாமல் நின்ற வேளையில் அவையை விட்டு விதுரர் வெளியேற ஸ்ரீ கிருஷ்ண பகவானும் அவரைத் தொடர்ந்து சென்று விதுரர் மாளிகையை அடைந்து அவையில் வில்லொடித்த காரணத்தை கேட்டார்.)

## காட்சி: 5

இடம்: விதுரர் மாளிகை
பங்கு பெறும் பாத்திரங்கள்: கண்ணன், விதுரர்

கண்ணன் வசனம்:

விதுரரே! இந்த பெரிய உலகில் புகழ்பெற்ற இரண்டு வில்கள் மட்டுமே ஒப்புமை இன்றி விளங்கியது. அவற்றில் ஒன்றான அர்ச்சுனன் வில்லிருக்க மற்றொரு வில்லினைத் தாங்கள் உடைத்ததன் காரணம் என்ன?

காம்போதி ஆதி

விதுரர்: மந்திரிகள் சொல்லையும் மதிக்கவில்லை!
மாமுனிவர் சொல்லையும் ஏற்கவில்லை!
மறைபேசும் நாவினைக் காக்கவில்லை!
இறைவனை கருவத்தால் வணங்கவில்லை!

விருத்தம்

முறை சொல்ல நீ வந்தாய் மதிக்கவில்லை! நலம்
உரைத்த என் வார்த்தை கேட்கவில்லை!
குறை சொல்லித் தரம் குறைத்த குறைந்த நாளோன்
பறை போலும் இறைச்சலொலி வார்த்தை சொன்னான்

பிலஹரி ஆதி

விதுரர்: செல்வங்கள் வந்துவிட்டால் தெய்வத்தைச் சிந்தை செய்யார்!
சொல்வதில் சுருக்கமின்றிச் சொல்வதை அறிந்து சொல்லார்
நல்மனம் புண்ணாக்த்தான் சொல்லம்பு தொடுப்பர் எனவே
வில்லினை ஒடித்தேன் இப்பாழ் வேந்தரின் வஞ்சர் உண்டோ?

காபி விருத்தம்

அதனால் தானே அருமை வில்லை
ஒடித்தேன் இன்றே! உறவை முடித்தேன்!

கண்ணனின் பாராட்டு

ஹம்ஸத்வனி விருத்தம்

இதுவும் நன்றெனச் சொன்னார் - கண்ணன்
விதுரர் செய்தது பாண்டவர் பலன் என (இதுவும்)

தர்பார் திஸ்ரம்

கண்ணன்: எதிரிகள் வீழ்வது நிச்சயம்!
விதுரரே! நீர் இதை பொறுத்தல் அவசியம்!
(எதிரிகள்)
எமன் வந்து எதிர்த்திடவும் அஞ்சிடுவான் - உந்தன்
ஏற்றமிகு வில்லின் முன்னிற்பார் எவரே? ஐவர்
தமக்கு இது அதிசயமாகும்!
உமக்கு முன் போர் செய்ய தயங்குவர் அதனால் - வில்
ஒடித்து நன்று! உரை படித்ததும் நன்று!
(எதிரிகள்)

(என்று கூறி விதுரருக்கு ஆறுதல் அளித்து அன்றிரவுப் பொழுதினை அந்த அரண்மனையிலேயே கழித்து மறுநாள் காலை குந்தி தேவியின் வீட்டுக்குப் போனார். ஸ்ரீ கிருஷ்ணனை குந்தி தேவியார் மனமுவந்து வரவேற்று உபசரித்தாள்.)

## காட்சி: 6

இடம்: குந்திதேவியார் அரண்மனை
பங்கு பெறும் பாத்திரங்கள்: கண்ணன், குந்தி

பேஹாக் ரூபகம்

குந்தி: பொன் மணி புனைந்தவனே
த்வாரகைக் கண்ணா
என் மனை வந்ததென்ன
பாக்கியம் கண்ணா!
நன் மதில் சூழும் இந்த
நகரத்தை ஏன் அடைந்தாய்
உன் மனக் கருத்தை நான்
அறியச் சொல்வாய்!

நளினகாந்தி

ஆதி

கண்ணன்: உன் புதல்வர்க்காய் நான் இங்கு தூது புகுந்தேன்
துன் மார்கள் துரியோதநன் நாடுதர மறுத்துவிட்டான்
வன் போரை நாடத்தான் வேண்டியிருக்கும்!
என்னாலும் போர் நிறுத்த இயலாதம்மா!

ரீதிகௌளை

ஆதி

குந்தி: தொல்மறை போற்றும் தூயவனே - மனம்
எல்லையில்லாத கவலையில் மூழ்குதே - போரில்
வெல்பவர் யாரோ? வீழ்பவர் யாரோ?
நல்லறிவாளனே நன்று சொல்வாய்!

ஆனந்த பைரவி

ஆதி

கண்ணன்: சொல்வது ஒன்றுண்டு சுடர்மணியே! அன்று
செங்கதிர் சூரியன் வந்துனக்கு அளித்திட்ட
வெல்லுதற்கு அரிய வீரன் கர்ணன் உன் மகன்
பார்த்தனுக்கு எதிராக வரப் போகின்றான்!

குந்தி வசனம்:

கண்ணா! என்ன சொல்கிறாய்? எனக்குப்
புரியவில்லையே!

கண்ணன் வசனம்:

ஆம் தாயே!

குறிஞ்சி

விருத்தம்

கண்ணன்: முன்னாள் சூரியனால் நீ பெற்ற மகன் கர்ணன்
இன்னாள் கௌரவர்க்குத் துணையாக நிற்கின்றான்
அன்னான் கர்ணனென அசரீரிப் பெயர் பெற்றான்
வின்னலம் கொண்டான் அங்க தேச வேந்தனானான்

பாண்டவர் தன்னுடன் பிறந்தவர் எனும்
உண்மையைக் கர்ணன் அறிந்திடான்

மூண்ட இப் போரினில் அருச்சுனனை
முடிக்க எண்ணியே முயலுகின்றான்!

கண்ணன் வசனம்:

ஆகையினால் அவன் பாண்டவர்க்கு அண்ணன் என்பதை பக்குவமாகச் சொல்லிடுவாய்! அவனிடம் அன்புடன் பேசி பாண்டவரோடு இணைய வைப்பாய். அவனிடம் நாக அஸ்திரம் உள்ளது. ஒருவேளை அவன் பாண்டவரோடு இணைய மறுத்தால் அந்த அஸ்திரத்தை அருச்சுனன் மேல் ஒரு முறை மட்டுமே பிரயோகப்படுத்த வேண்டும் என வரம் வாங்கிக் கொள்வாய்!

நாதநாமக்கிரியா — ஆதி

கண்ணன்: மாது நீ மகன் என வருந்தாதே - இது
யாதுக்கும் காரணம் யான் அதனால்
சூதினை சூதால் வெல்வதுதான்
நீதியென நீயும் மறவாதே!

குந்தி வசனம்:

கண்ணா என்ன கொடுமை இது?

உசேனி — ஆதி

குந்தி: கர்ணன் எந்தன் பிள்ளையா?
கண்ணா உனக்கு தயவில்லையா
ஏன் மறைந்தாய் ஐயனே - இப்போது
ஏன் உரைத்தாய் மெய்யினை!

போரில் பார்த்தன் இறப்பதோ? - அப்
போதும் பார்த்து இருப்பதோ?
யாது செய்வேன் கடுமையே! இது
இறைவன் செய்த கொடுமையே!

குந்தியின் துயரம்

ஜோன்புரி ரூபகம்

சர்ப்ப கணையை நீக்கினால்
கர்ணன் இறப்பு சத்தியம்! - அதை
விட்டு விலக்க மறுத்திட்டால்
பார்த்தன் இறப்பு நிச்சயம்!
அற்பமான நிலத்திற்காக
அண்ணன் தம்பி போரெதற்கு?
சிற்பமாக நின்று எதனைச்
செய்வ தென்று தேம்புவாள்!

(செய்வதறியாது சிலை போல் நின்ற குந்தி தேவியைப் பார்த்து கிருஷ்ண பகவான் மேலும் சில வார்த்தைகளைச் சொல்லி ஆறுதல் அளித்து செய்ய வேண்டியதை மீண்டும் நினைவுறுத்தி அங்கிருந்து புறப்பட்டு விதுரராஜன் அரண்மனையை அடைந்தார்.)

## காட்சி: 7

| | |
|---|---|
| இடம்: | துரியோதனன் அந்தரங்க ஆலோசனைக் கூடம் |
| பங்கு பெறும் பாத்திரங்கள்: | திருதராட்டிரன், சகுனி, துரியோதனன், துச்சாசனன், விகர்ணன் |

(சூரிய அஸ்தமனத்திற்குப் பிறகு எங்கும் கரிய இருள் சூழ்ந்தது. அந்த நள்ளிரவிலே துரியோதனன் தனது தம்பிமார்களுடன் கலந்து மந்திராலோசனை நடத்தினான்.)

துரியோதனன் ஆலோசனை நடத்துதல்

சங்கராபரணம்

ஆலோசனை செய்தான் - மந்திர
ஆலோசனை செய்தான் (ஆலோசனை)

தகப்பனாகிய திருதராட்டிரன்
கர்ணன் சகுனி தம்பிகளுடனே (ஆலோசனை)

காட்டுக்கு போன பாண்டவர்களை
கேட்க நாடு என்று மூட்டிவிட்டான் கண்ணன்
- அவன்

மீட்டு போகுமுனம் கொன்றுவிடல் என்று
போட்டனன் திட்டம் திருதராட்டிரன்

திருதராட்டிரன் வசனம்:

அருமையான புலி வலையில் அகப்பட்டால் வேடர்கள் விடமாட்டார்கள். அதுபோல கோபால கிருஷ்ணனை இந்த ராத்திரிப் பொழுது போவதற்கு முன் கொன்று விடுதலே நாம் செய்யும் நல்ல காரியம்!

சந்த்ரஜோதி ஆதி

திருதராட்டிரன்போரிட்டு வெல்ல சதி செய்யும் கண்ணன்
போவதன் முன்னம் கொல்லுதல் வேணும்;
இவன் தனை தூதன் என்று நாம் விட்டால்
கொடிய புலிதனை விடுவது வாகும்!

(கண்ணில்லாத திருதராட்டிரன் சொன்னதைக் கேட்ட அளவில் விகர்ணன் என்பான் எழுந்து இதற்கு முன்னே ராஜாக்களில் பூமியிலே தூதர்களைக் கொன்றவர்கள் யாரிருக்கிறார்கள் என்று நியாய வார்த்தை பேசினான்.)

விகர்ணன் கூறுதல்

ரஞ்சனி விருத்தம்

பாதியில் எழுந்து பார்த்து
தூதரைக் கொல்லல் பாவம் என
வேதம் அறிந்த விகர்ணன்
ஓதினான் உயர்ந்த நல்லோன்.

நடபைரவி

ரூபகம்

விகர்ணன்: முதிர்ந்தவர் அறியா இளையவர் - முதலா
அந்தணர் அரசர் மங்கையர்
பிணி கண்டவர் பணி கொண்டவர்
துதி செய்பவர் தூதர்
இவர்களை யாரும் கொன்றால் அவர்க்கு
இதைவிட பாவம் ஒன்றுமற்றில்லை!

ப்ருந்தாவன சாரங்கா

திஸ்ரநடை

விகர்ணன்: நல்லோரைக் கொன்றவர்கள்
நரகினைச் சேர்வர் - இந்த
கண்ணனை உம்மால் கொல்லக்
கருதினால் இயலாதய்யா!
முன்னாலே சொல்லி விட்டேன்!
முறையாக எச்சரிக்கை!
அல்லாமல் கொல்லச் சொன்னால்
அதனாலே அழிவீர் நீரே!

(இவ்வாறு கூறிய விகர்ணனைப் பார்த்துக் கோபித்த துரோபதியை துகிலுரித்த துச்சாசனன் என்ற கொடியோன் தன் தமையனிடம் வெகுண்டு சில வார்த்தைகளை சொன்னான்.)

தோடிஸ்வரம்

ஆதி

துச்சாசனன்: யாரிவனை இங்கு அழைத்தது?
நல்ல ரகசியம் பேசிடும் வேளையில் (யாரிவனை)

சிறுவன் இவன் சொல்லை
பொறுமையுடன் கேட்க (யாரிவனை)

பெரியவர் நாம் இங்கு
பேசிடத் தாம் நன்கு (யாரிவனை)

துச்சாசனன் வசனம்:

ரகசிய ஆலோசனை செய்கின்ற நமக்கு இந்தச் சிறுவனின் ஆலோசனை தேவையில்லை. இவனை வெளியே அனுப்புங்கள்.

புஷ்பலதிக கண்டசாபு

துச்சாசனன்: கேளிர் அவைக் கேளிர்களே!
கேடு செய்ய வந்த கண்ணன்
ஓடுவதன் முன்னம் இன்று

மாளிகையில் தீ வைக்க வேண்டும்
மாயன் கண்ணன் விதுரனதில்
வெந்து போக வேண்டும்!

(இவ்வாறு சொல்லக் கேட்ட துச்சாசனனை அடுத்துக் கர்ணன் தன் திட்டத்தைச் சொன்னான்.)

கனகாங்கி விருத்தம்

கர்ணன்: நெருப்பிலிட்டு மீண்டு வந்தால்
கோழை கொன்றா னென்பார்;
இருப்பிடம் கண்டு நானே
விடுப்பேன் என் வெவ்விய பாணம்!

ஆபேரி ஆதி

சகுனி: கர்ணனே பொறுத்திருப்பாய்!
காரியம் வேறொன்றுண்டு!
மல்லர்கள் ராட்சதர்கள்
கொண்டதோர் குழியை வெட்டி
நல்லொரு ஆசனத்தை
அதனிடை நிறுத்தி - ஆங்கு
வல்லவக் கண்ணனைத் தான்
வரவழைத் தமர வைத்து
செல்ல இக் குழியில் வீழச்
சதி செயல் நன்று! நன்று!

துரியோதனனின் ஆணை

தர்பாரி கானடா

விருத்தம்

நன்றெனச் சொன்னான் சர்ப்பக்
கொடியுடைக் கொடியோன் அன்றே
சென்றுதன் ஏவல் நூறு
ஆயிரம் அரக்க ரோடு
வன் பெருங் குழியைத் தோண்ட
ஆணையிட்டகன்று போனான்
தன் வருங் காலந் தன்னின்
அழிவினுக்கு அடிக்கல் வைத்தான்.

## காட்சி: 8

| | |
|---|---|
| இடம்: | துரியோதனன் அரண்மனை |
| பங்கு பெறும் பாத்திரங்கள்: | கண்ணன், அவைப் பெரியோர்கள், துரியோதனாதிகள் |

(மறுநாள் துரியோதனனுடைய தூதர்கள் கிருஷ்ணன் தங்கியிருக்கும் மாளிகையை அடைந்து துரியோதனன் தங்களை அழைத்து வரச் சொன்னார் எனக் கூறக் கண்ணனும் அதற்கிசைந்து அரண்மனைக்குப் புறப்பட்டுச் சென்றார். அரண்மனையில் துரியோதனனிடம் கிருஷ்ணனின் வரவைச் சொன்ன காவலரிடம் கண்ணனை மட்டும் உள்ளே அனுமதியுங்கள் என்று துரியோதனன் கட்டளை பிறப்பித்தான்.

கண்ணன் எதிர்ப்பார்த்தவாறு சபைக்கு எழுந்தருளினார். துரியோதனன் கண்ணனை எதிர் கொண்டழைத்து அவருக்காக இடப்பட்டிருந்த ஆசனத்தில் வஞ்சக அன்போடு அமர்த்தினான்.)

கண்ணன் பேருருக் கொள்ளல்

வலஜி

வஞ்சனை மனத்துள் கொண்டு
வருக வருக என்றழைத்து

பஞ்சணை ஆசனத்தில் அமர்த்தினான்
அமர்ந்த கண்ணன் ஆசனம் சாய்தல் கண்டு
சூதினைத் தெரிந்து கொண்டு
பேருருப் பெற்று நின்றான்!

(கண்ணன் பேருருக் கொள்ளும் காட்சி - இசையில்)
அவையோர் செயல்

வலஜி — விருத்தம்

கோபித்த கண்ணன் அங்கே
பேருருக் கொண்டு நின்ற
காட்சியைக் கண்டு வானோர்
திகைத்தனர்; சபையில் உள்ளோர்
சேவித்த வண்ணம் மிருந்தார்!
கை சேர்ந்து வணக்கஞ் செய்தார்!
ஆவியும் துடித்து நைந்தார்
ஐயா உன் சரணம் என்றார்!

அவையிலுள்ளோர் கண்ணபிரானைத் துதி செய்தது

சாருகேசி — விருத்தம்

ஆதி பிரமனும் நீயே!
ஆழி துயில் அமலன் நீயே!
சோதிச் சுடர் முக்கண் மூர்த்தியும் நீயே
ஊழியில் உயிர்த்திடும் உள்ளொளிக் கருவும் நீயே!
ஓதிடும் வேதியர் வேதமும் பொருளும் நீயே
பாழியந் தோளுடைப் பற்பநாபன் நீயே!

ரேவதி — விருத்தம், ஆதி

உலகம் நீ உயிரும் நீ உண்மை நீ பொய்மை நீ
கலகம் நீ கருணை நீ முதலும் நீ முடிவும் நீ
கடலும் நீ மலையும் நீ கனலும் நீ அனலும் நீ
உடலும் நீ உணர்வும் நீ மனமும் நீ குணமும் நீ

அவை யோர்கள்

மாதவா சினங் கொள்ளாதே;
மறை முதற் பொருளே முனிந்திடாதே!
யாதவா அடியோ மெங்கள் அகத்துறை
தேவன் நீயே!
மேதவ ஞானியர்க்கும் தோன்றிடா ஆதவனே!

(அப்போது சபையில் இருந்த பீஷ்மர், கர்ணன், திருதராட்டிரன் அவன் பிள்ளைகள் அனைவரும் எழுந்திருந்து சிரத்தின் மேல் கை-களைக் கூப்பிக் கொண்டவர்களாய் தங்கள் தப்பிதத்தைப் பொருத்தருள வேண்டினர்.)

அவையோர் செய்கை

வாசஸ்பதி

ரூபகம்

தப்பிதம் செய்தோ மென்றார்
தக்கதேயன்று என்றார்
இப்பிழை பொறுக்க என்றார்
இறைஞ்சி தாள் நெடிது வீழ்வார்
செப்பியக் கமலச் செங்கண்
சீதர மூர்த்தி நாமம்
ஒப்பிலா நெடிய மாயன்
பாதமே போற்றி நின்றார்;

(எல்லோரும் பக்தியுடனே ஆயிரம் திருநாமமும் தியானித்து நின்றபடியால் ஸ்ரீ கிருஷ்ண பகவானும் கோபம் நீங்கிக் கிருபை செய்து வான்முட்ட வளர்ந்து நின்ற தன் மேனியை அடக்கினார். இந்நிகழ்ச்சியைக் கண்டு சிறிதும் அஞ்சாமல் மனத்திலே நெகிழ்ச்சி கொள்ளாமல், பரம் பொருளான ஸ்ரீ கிருஷ்ண பகவானை சிரம் மேற் கரம் குவித்து வணங்காமல் நின்று கொண்டிருந்த துரியோதனனைப் பார்த்து ஸ்ரீ கிருஷ்ணன் சொல்லலானார்.)

வஸந்தா

ஆதி

கண்ணன்: நல்லது நல்லது கொல்ல நினைத்தது
நாயினும் கீழானாய்! - எது

வல்லது என்பதை வருமிந்த போரினில்
உணர்ந்திடுவாய் நீசா!
உன்னையும் உன்னோடு சேர்ந்தவர்
தன்னையும் சேர்த்து அழித்திடவே - உறுதி
கொண்டது என் மனம் - ஆயுதமின்றி நான்
சண்டை செயக் காண்பாய்!

விருத்தம்

நின்னை அழித்திட அஞ்சினோம்!
அன்று ஐவரும் செய்திட்ட சபதமொன்றுளதால்
நின்னை அழித்திட அஞ்சினோம்!
இன்னமும் நீ மனம் மாறுகின்றிலை;
முன்னம் உரைத்தது பொய்யில மெய்யுணர்!

(என்று கூறிவிட்டு அவையை விட்டு வெளியேறினார் ஸ்ரீ கிருஷ்ணன். அவரோடு அங்கிருந்த எல்லா அரசர்களும் பின் தொடர்ந்தனர். அவர்களில் ஸ்ரீ கிருஷ்ணன் கர்ணனை மட்டும் தனியே அழைத்து பேசத் தொடங்கினார்.)

## காட்சி: 9

இடம்: நந்தவனம்
பங்கு பெறும் பாத்திரங்கள்: கண்ணன், கர்ணன்

ஈசமனோஹரி ஆதி

கண்ணன்: கொடையிற் சிறந்த அங்கக் கோமகன் நீ - உலகை
அடையப் பிறந்த வகை யானறிவேன் - உரிமைத்
தடையைப் பெற்ற அந்தப் பாண்டவர்கள் - உன்
உடையத் தம்பியர்கள் உணர்ந்திடைய்யா!

கர்ணன் வசனம் :

என்ன! பாண்டவர்கள் என் தம்பியர்களா?

கண்ணன் வசனம்:

ஆம்! கர்ணா!

### கண்ணன் உண்மையுரைத்தல்

ஷண்முகப்பிரிய — ஆதி

நீயந்த பாண்டவர்க்கு மூத்தவன் ஆவாய்!
தருமனே உன் தம்பி ஆவான்! - புகழ்க்
குந்தியே உன் தாயுமாவாள் - என
முந்திய கதையெலாம் முறையாகச் சொன்னார்.

சுத்தசீமந்தனி — ஆதி

கர்ணன்: என்ன சொன்னாய் கண்ணா - என்
இனிய தம்பியரா பாண்டவர்
முன்னமே ஏனிதை உரைக்கவில்லை
என்னினிச் செய்குவேன் விளங்கவில்லை!

பாகேஶ்ரீ — ஆதி

கண்ணன்: வரத்தினால் குந்தி உங்கள்
அறுவரைப் பெற்றாள் அதிலே
கரத்தினால் உன்னைப் பேழை
தன்னிலே வைத்துப் போனாள்!
சிரத்தினால் வணங்கி வாழ்த்தச்
சேர்ந்திடு ஐவரோடு
துரத்துவோம் துரியோதனாதிச்
சேனைகள் போரில் ஒன்றாய்!

கண்ணன் வசனம்:

கர்ண மகாராஜனே! காலம் தாழ்த்தாது உன் தம்பிய-ருடன் சேர்ந்து துரியோதனனுடன் போர் புரிவாய்.

கர்ணன் வசனம்:

கோவர்தன கிரியைக் குடைபோல் எடுத்து மழையைத் தடுத்தவனே! எல்லா முணர்ந்த நீயே இப்படிப் பேசுதல் முறையாகுமா?

கீரவாணி ஆதி

கர்ணன்:

நன்றி கெட்டுப் போகமாட்டேன் - நான் (நன்றி)

- அந்த

துரியோதனன் தன்னை நம்பி
துயராலே தனியே வந்தேன்
உரியோர்கள் எனக்கு இல்லை - நல்ல
உண்மைக்கும் மதிப்பு இல்லை
இத்தனை நான் சோறு இட்டு
அங்க தேச அரசனாக்கி
உத்தம வாழ்வு தந்தான் - அந்த
வித்தகனைப் பிரிதல் முறையோ?

ராமப்ரிய கண்டசாபு

உலகமே வியந்து போற்ற
செல்வமுஞ் சீரும் தந்து
நலம்பலச் செய்தான் அந்தக்
கருநாகக் கொடியோன் தன்னை
விலகி மேற் செல்ல மாட்டேன்
வேந்தனாய் ஆக்கி வைத்த
திலகமாம் சுயோதனன்தன்
நட்பினை நீக்கி நாயேன்

கண்ணன் வசனம்:

நன்று! நன்று! கர்ணா! உன் செஞ்சோற்றுக் கடன்! வையகம் உள்ள மட்டும் உன் புகழ் மங்காமல் தங்க வாழ்த்துகின்றேன்.

# காட்சி: 10

இடம்: அஸ்வத்தாமன் வீடு

பங்கு பெறும் பாத்திரங்கள்: கண்ணன், அஸ்வத்தாமன்

(என்று சொல்லி அங்கிருந்து புறப்பட்டு துரோணாச்சாரியாரின் குமாரன் அஸ்வத்தாமனைச் சந்தித்துச் சில வார்த்தைகளைச் சொன்னார்.)

கண்ணன் வசனம்:

அஸ்வத்தாமனே! நான் துரியோதனனிடத்திலே ஐந் தூராவது கேட்க அவன் மறுத்ததற்கு நீயே சாட்சியாவாய். மேலும் நாளை நடைபெறப்போகும் யுத்தத்திலே படைத் தலைமையை நீ ஏற்க மறுக்க வேண்டும். இந்த வரத்தை சூரியன் சாட்சியாக உன்னிடமிருந்து நான் பெற்றுக் கொள்கின்றேன்.

அஸ்வத்தாமன்:

நல்லது கண்ணபிரானே!

இவ்வாறு அஸ்வத்தாமனிடமிருந்து வரம் பெற்றுக் கொண்ட கண்ணன் விதுரரின் அரண்மனையை அடைந்து இந்திரனை நினைக்க அவர் முன் இந்திரன் வணங்கி நின்கிறான்.

# காட்சி: 11

இடம்: விதுரர் அரண்மனை

பங்கு பெறும் பாத்திரங்கள்: கண்ணன், இந்திரன்

ஹமீர் கல்யாணி — கண்டசாபு

கண்ணன்: வச்சிர வாளால் மலைகளின் சிறகறுத்த
இந்திரச் செம்மலே கேளாய்!
அச்சிறு மைந்தன் இந்திரன் பகையாய் நின்ற
குந்தியின் புத்ரன் கர்ணன்

நிச்சயம் போரில் வெல்வான் நெருப்புமிழ்
சர்ப்பமென்றும்

மந்திரப் படைகள் வல்லோன்
இச்செகம் புகழுக் கர்ணன் கவசகுண்டலத்தோடு
உள்ளான்

தந்திரத் தோடு நீயும் பெற்றதை மீள வேண்டும்;

(நல்லது என்று சொல்லி கர்ணனிடமிருந்து கவச குண்டலங்களை தானமாகப் பெற்றுவர, இந்திரன் அந்தண வேடத்தில் அவனை அடைகிறான்.)

## காட்சி: 12

இடம்: கர்ணன் அரண்மனை
பங்கு பெறும் பாத்திரங்கள்: கர்ணன், இந்திரன்

கானடா ஆதி

கர்ணன்: அன்பு வைத்து அடியேன் பால்
வந்த முது அந்தணரே
என்ன உமக்குத் தேவை
ஏற்ப நான் அளித்திடவே!

செஞ்சுருட்டி மிஸ்ரசாபு

இந்திரன் (அந்தண வேடத்தில்):
கற்பகத் தருவினைப் போல் தானம் வழங்குகின்ற
நற்பெருந் தகையோனே; நான் வேண்டுவதெல்லாம்
பொற் கவசம் மற்றும் குண்டலமே அதனை
மறுக்காமல் நீ தந்தால் மகிழ்வென் நானே!

அப்போது கர்ணனின் பிதாவான சூரியன் அசரீரியாக...

மோஹனம்

விருத்தம்

சூரியன் வாக்கு:கர்ணா! வந்திருப்பது இந்திரன்
வழங்காதே இது வாசுதேவன் வஞ்சகமே!

(என்று கூற கர்ணன் அதற்கு மறுமொழி கூறினான்.)

லதாங்கி

ஆதி

கர்ணன்: இந்திரன் கை தாழவும்
என் வலக்கை ஓங்கவும்
முந்தி பெரும் தவம் செய்தேன் முறையாக!
வந்தவர்க்கு வேண்டியதை
எந்தன் உயிர் போனாலும்
சொந்தமெனத் தருவது மெய் சரியாக!

(கர்ணன் இவ்வாறு உரைத்து கொஞ்சமும் சிந்தியாமல் கவச குண்டலங்களை இந்திரனிடம் அறுத்துத் தர, இந்திரன் அவற்றை ஏற்றுக் கொண்டு சக்தி வாய்ந்த வேலாயுதம் ஒன்றை அளித்து மறைகிறான். இந்திரன் கண்ணனை அடைந்து நிகழ்ந்ததைக் கூற அதைக் கேட்டு ஸ்ரீ கிருஷ்ண பகவான் இந்திரனுக்கு பதிலுரை செய்தார்.)

## காட்சி: 13

இடம்: விதுரர் அரண்மனை
பங்கு பெறும் பாத்திரங்கள்: கண்ணன், இந்திரன்

கேதாரம்

திஸ்ரம்

கண்ணன்: ஆயுதம் பட்டுகாயம் ஆகவொட்டாது காக்கும்
தூய அக் கவசக் குழைகள் கேட்டதும் தந்த கர்ணன்
தீயரும் உயிரைக் கேட்பின் ஈந்திடும் தியாகி யாவான்!
நீயிது பெற்று வந்தாய்! நீங்கிடாப் புகழை உற்றான்!

என்று கர்ணனைப் புகழ்ந்து கூறிய கண்ணபிரான் இந்திரனுக்கு விடை கொடுத்து அனுப்பி விட்டு, குந்தி மாதேவியை நாக அஸ்திரத்தை கர்ணன் அர்ஜுனன் மேல் ஒருமுறை மட்டுமே பிரயோகப்படுத்த வேண்டும் என கர்ணனிடம் வரம் கேட்டு வரச் சொல்லியனுப்பினார். குந்தி தன் தாய் என்று முன்னரே கண்ணனால் தெரிந்து கொண்ட கர்ணன் குந்தியை மகிழ்ச்சியோடு வரவேற்றான்.)

## காட்சி: 14

இடம்: கர்ணன் அரண்மனை

பங்கு பெறும் பாத்திரங்கள்: கர்ணன், குந்தி

சரஸ்வதி — ஆதி

கர்ணன்:
வந்தனை! வந்தனை! அம்மா
இந்த மகன் தனைக் காண
வந்தனையே மிக நன்று!
பிறவிப்பயன் பெற்றேன் இன்று!

### குந்தியின் சோகம்

முகாரி — ஆதி

விழிவழிக் கண்ணீர் வார
வேதனை முகமே கொண்டு
அழிவுறு மனத்தினாலே
அந்த நாள் நிகழ்நத வற்றைப்
பழிபெறு நிகழ்ச்சி யென்று
சிந்தனை கொண்டு ஏங்கித்
தழுவி நின்றவனை வாழ்த்திச்
சொல்லினான் தக்க தெல்லாம்

(கர்ணனைப் பாண்டவர் பக்கம் வரச் சொல்லி அறிவுரை பகர்கின்றாள் குந்திதேவி. கர்ணன் ஏற்கனவே கண்ணனும் இதைச் சொன்னதாகவும் தான் அதை ஏற்க மறுத்து விட்டதாகவும் கூறுகிறான்.)

பஹுதாரி ஆதி

கர்ணன்: ஏது நீ உரைத்திட்டாலும் எந்தன் ஆருயிரைக் காத்த
கோதிலான் துரியோதன் தான் கொற்றவன் எனக்கு அம்மா!
தூதனாய் வந்த கண்ணன் சொல்லினார் எல்லாம் என்னில்
பேதமே கொள்ள மாட்டேன் கௌரவர்க்காக நின்றேன்.

கர்ணன் வரம் தருதல்

வராளி கண்டசாபு

மற்றெது வேண்டுமாயின்
மறுத்திடேன் தருவேன் என்று
கற்றவன் கர்ணன் கூற
அருச்சுனன் மேலே போரில்
பற்றவே நாகக் கணையே
ஒரு முறை மட்டும் ஏவப்
பெற்றனள் வரத்தைக் குந்தி
கண்ணனின் வார்த்தைக் கருதி

(குந்தி இவ்வாறு வரத்தைக் கர்ணனிடமிருந்து பெற்றதும் கர்ணன் தான் இரண்டு வரங்களைத் தன் தாயினிடம் வேண்டினான்.)

சிவகல்யாண் விருத்தம்

கர்ணன்: உன் பிள்ளை என்றுரைக்க வேண்டும் - என்னை
உன் பிள்ளை என்றுரைக்க வேண்டும் - நான்
பின் யுத்த களத்தினிலே மாண்டு வீழும் நாளில்
(உன் பிள்ளை)

ஸிமனேசரஞ்சனி ஆதி

கர்ணன்: இன்னும் ஒரு வரம் வேண்டும் அன்னையே - அந்த
ஐவரும் நம் அருமை அண்ணன் கர்ணன் என்றறிந்தால்
இந்த நிலம் எல்லாமே எந்தன் சொந்தமாக்கிடுவார்
வந்த அதை துரியோதன் தனக்கு நான் தர வருமே!
- அதனால்யான்
இறந்ததும் கூறிடுவாய் என் கதையை!

(எனக் கர்ணன் கூற குந்தி அதனை ஏற்று கண்களில் நீர் ததும்ப அங்கிருந்து வெளியேறி ஸ்ரீ கிருஷ்ண பகவானைச் சந்தித்து நிகழ்ந்ததுரைக்க ஸ்ரீ கிருஷ்ணனும் நல்லதென்று சொல்லி தான் வந்த காரியம் கைகூடியது என மனத்தெண்ணி பாண்டவர்களைச் சந்திக்கப் புறப்படலானார்.)

## காட்சி: 15

இடம்: கண்ணன் தேரில் ஏறுதல்
பங்கு பெறும் பாத்திரங்கள்: கண்ணன், வழியனுப்புவோர்

ரவிசந்திரிகா ஆதி

கண்ணன் எண்ணமும் நிறைவேறியது
வந்த காரியம் கை கூடியது - என
கண்ணனும் கருத்து கொண்டார்!
தேரினில் ஏறிக் கொண்டார்!
தூது போய்ச் சொன்னதும்
யுத்தமெனத் துணிந்ததும்
விதுரர் வில் ஒடித்ததும்
கர்ணன் கவசம் பெற்றதும்
மற்றவை யாவும் சொன்னார்
மறையெலாம் வாழ்த்த நின்றார்.

இவ்வாறு ஸ்ரீ கிருஷ்ண பகவான் பாண்டவர்களுக்காக தூது சென்ற இந்த இடம் ஸ்ரீ மகாபாரதத்தில் "ஸ்ரீ கிருஷ்ணன் தூது" என்று பெருமையாகப் பேசப்படுகின்றது.

## நூல் பயன்

க்ருஷ்ண ஸ்வாமி தூது! - இதை
கேட்பவர்க்கு துயர் ஏது?

தருமம் தன்னை காக்க கண்ணன்
தூதுவனாய் வந்தான்!

சத்தியம் வெற்றி பெறவே கண்ணன்
சாரதியாய் நின்றான்!

உலக நலம் வேண்டி கண்ணன்
உண்மை வழியை தந்தான்!

பாதகங்கள் நீங்க கண்ணன்
கீதை அருளிச் செய்தான்!

க்ருஷ்ண ஸ்வாமி தூது - இதை
கேட்பவர்க்கு துயர் ஏது?

சுபம்

# "பரமனை நாடிய பாவை".



"உன் தன்னோடு உற்றோமே யாவோம்
உனக்கே நாம் ஆட்செய்வோம்."



# "பரமனை நாடிய பாவை"

(ஸ்ரீ ஆண்டாள் இசை நாடகம்)

நங்கநல்லூர் மணவாளதாசன்

## நூல் பயன்

நாட்டை ஆதி

மார்கழித் திங்கள் மதி நிறைந்த நன்னாளால்
நீராடப் போதுவீர் போதுமினோ என்னுமிது
பாவை பாடிய திருப்பாவை - அவள்
பரமனை நாடிய ஒருபாவை!
நாயகனாய் நின்ற நந்த கோபன் மகன் நாமம்
ஓயாமல் பொழுதெல்லாம் நவின்ற இக்கோதை கதை
உரைப்பார் உலகில் பெருநிலை பெறுவார்
உரைப்போம் நாமும் உயர்நிலை யுறவே!

## காட்சி : 1

இடம்: நந்தவனம்
பங்கு பெறும் பாத்திரங்கள்: பெரியாழ்வார், ஆண்டாள் (குழந்தைப்பருவம்)

### பெரியாழ்வார் சிறப்பு

நாட்டை கண்டநடை

சீர் ஓங்கும் தென் நாட்டில்
வில்லி புத்தூர் என்னும்
பேரூரில் பெரியாழ்வார்
வாழ்ந்து வந்தார் - அவர்
கார் மேனிச் செங்கண்
கண்ணனைப் பாடி ஒவ்
வோர் நாளும் பாமாலை
சேர்ந்து வந்தார்!

(பெரியாழ்வார் நந்தவனத்தில் பூக்கொய்தபடி பாசுரங்களைப் பாடிக் கொண்டிருத்தல்)

## பெரியாழ்வார் பாசுரம்

ஆனந்த பைரவி | விருத்தம்

கையும் காலும் நிமிர்த்துக் கடார நீர்
பைய வாட்டி பசுஞ்சிறு மஞ்சளால்
ஐய நாவழித் தாளுக்கு அங்காந்திட
வைய மேழும் கண்டாள் பிள்ளை வாயுளே.

## பெரியாழ்வார் நந்தவனத்தில் குழந்தையைக் காணுதல்

ஆனந்த பைரவி | ஆதி

நாளுக்கு நாள் அந்த நாரணன் பேர் சொல்லி - அவன்
தோளுக்குப் பூமாலை சார்த்தி வந்தார்
நந்தவனம் சென்று பூக்கொய்ய குழந்தை ஒன்றை
அந்த தினம் கண்டு அதிசயித்தார்!

## பெரியாழ்வார் நந்தவனத்தில் கிடந்த குழந்தையைப் பார்த்துப் பாடுதல்.

தேவ்ஷ் | ஆதி

யாரிந்த தெய்வக் குழந்தை
சூரியன் ஒளிபோல ஒளிவீசும் மேனி எழில்
(யாரிந்த)

பெற்றவர் பேரென்ன? விட்டவர் யாரிங்கு?
பெருமானே என் செய்வது? இது
திருமகளைப் போல் உள்ளது - அறியேன்
(யாரிந்த)

யாராக இருந்தாலும் நாராயணா உந்தன்
பாரளந்த பாதத்தில் சேர்ப்பேன்!
வாராக அவதாரனே உந்தன் செல்வமென
சேர்க்கின்றக் குழவி இதைக் காப்பாய்!

# காட்சி: 2

## ஆண்டாளின் சிறு வயது நிகழ்ச்சிகள்

இடம்: பெரியாழ்வார் வீடு

பங்கு பெறும் பாத்திரங்கள்: பெரியாழ்வார், குழந்தை ஆண்டாள்

என்று குழந்தையை ஏற்று தன்மகள்
ஆக்கிக் கொண்டு பெரியாழ்வார்
அன்று கோதை எனும் அரும் பெயரிட்டு
நன்று பாராட்டி வளர்ப்பவரானார்

தந்தையோடு தாம் பூக்கள் கொய்யவே
நந்தவனம் செல்வாள் - கோதை
அந்த பூக்களை மாலையாகத் தேன்
சிந்தி விடாமலே கோர்ப்பாள்

மோஹனம் மிஸ்ர சாபு

எங்கும் எதிலும் கண்ணன் உருவம்
கண்டு வந்தாள் கோதை!
மங்கைப் பருவம் ஆகி மாலை
நினைந்து மயக்கம் கொண்டாள்!
அங்கிருந்த கூடை ஒன்றில்
அழகு மாலை கண்டாள்
தங்கழுத்தில் சூடி ஆடி
தன்னில் அழகு பார்த்தாள்!

கோதை மலர் சூடுதல்

பந்துவராளி விருத்தம்

திருமாலுக் கென்று மாலை
தொடுத்து வைத்த பெரியாழ்வார்
தினம் சூடி வரும் கோதை
செயல் ஒருநாள் கண்டார்!

சஹானா ஆதி

பெரியாழ்வார்: அபசாரம்! அபசாரம்!
என்ன செய்தாய் நீ உபசாரம்?

பெருமாளுக் கென்று
தொடுத்து வைத்ததனை
எடுத்து கழுத்தில் நீ அணிந்து கொண்டது
(அபசாரம்)

அறிவுடையாள் என்று
அதிசயித்தேன் இன்று
அருமை மாலையினை அணிந்து கொண்டது
(அபசாரம்)

(ஆண்டாள் செய்வதறியாது திகைத்து வெட்கித் தலை குனிந்து தான் செய்த தவறுக்காக வருந்துதல்)

## ஆண்டாளின் துயரமும் ஆழ்வாரின் சமாதானமும்

கல்யாண வஸந்தம் ஆதி

கண்ணீர் விட்டாள் - கோதை
கண்ணீர் விட்டாள்

கண்ணன் என் காதலன் ஆதலினால் - இந்த
வண்ண மாலை நான் அணிந்ததென்றாள்
(கண்ணீர்)

எண்ணி இதை ஆழ்வாரும் மனம் வருந்தி
அறியாக் குழந்தை என்று அகம் நினைந்து
எல்லாம் அவன் செயல் என்றுணர்ந்து
புதுமலர் பறித்து வர புறப்பட்டார்!

# காட்சி : 3

இடம்: பெரியாழ்வார் வீடு

பங்கு பெறும் பாத்திரங்கள்: பெரியாழ்வார், பெருமாள்

பெரியாழ்வாரின் கவலை

ரேவதி ஆதி

புதுமலர் மாலை கொண்டு
பதுமநாபனைக் கண்டு
சாத்தினர் அம்மாலை
மணம் பெற வில்லை
மனம் உடைந்த ஆழ்வார்
மனை அடைந்து ஆழ்வார்
கவலை என்னும் பெருங்கடலே!

(பெரியாழ்வார் கவலையுடன் அன்றிரவு படுத்துறங்க, அவரது கனவில் அரங்கநாதன் எழுந்தருளிச் சொல்லுதல்)

குறிஞ்சி விருத்தம்

பெருமாள்: சூடிக் கொடுக்க வந்த சுடர்க் கொடியே என்னைப்
பாடிப் பரவ வந்த பெண் கொடியாம் - அவள்
பூமி நாயகி அவதாரம் - இந்தப் பிறவியில்
அவள் எனக்கு வரும் தாரம்!

கல்யாணி ஆதி

எம்பெருமானின் திருவாய்ச் சொல்லை
தம் செவியாலே கேட்டின்ப வெள்ளம்
ஆனந்தமாக ஆடினர் உள்ளம்
தேனமர் வண்டாய்த் திரிந்து எங்கும்;

மறுநாள் காலை மகிழ்வுடன் எழுந்து
சிறுமலர் சேர்த்து மாலையுங் கோர்த்து

கறுமைக் கூந்தல் கோதைக் கணிவித்து
பெருமாளுக்கதை சார்த்தினரே!

முன்னை விடப்பெரும் மணமுண்டானது
முன்னை விடப்பெரும் அழகுண்டானது
என்னை என எண்ணி நடமாடி கோதை
தன்னை நினைந்தவர் உருகினரே!

பெரியாழ்வார் மகிழ்ச்சி வெள்ளத்தில் ஆழ்ந்து,
ஆண்டாளைப் புகழ்ந்து பாடுதல்

சாமா ஆதி

பெரியாழ்வார்: ஆண்டாள் இவளே - என்மனம்
ஆண்டாள் இவளே!

(ஆண்டாள்)

பூண்டாள் பெருமானின் மாலையினை
பூமகளே இவள் பாமகளே!

(ஆண்டாள்)

என் மகளாய் வந்த பாக்கியமே - என்
மருமகனாய்த் திரு மாலைத் தந்த...

(ஆண்டாள்)

கோதையின் கனவு

சாருகேசி ஆதி

அன்று முதல் அவள் அச்சுதனைத் தினம்
பாடி நடம் செய்தாள்;
நோன்பினை நோற்றவள் நாயகனைப் பெற
நாடித் தவம் செய்தாள்;
வான் புகழும் திருப்பாவை என்றொரு
நூலினை ஆக்கினளே! - கனவில்
தான் கண்ணனொடு மணம் பெறும்
காட்சியைக் கண்டு மகிழ்ந்தனளே!

(சாருகேசி ராகத்தில் தில்லானா)

## காட்சி: 4

இடம்: நந்தவனம்
பங்குபெறும் பாத்திரங்கள்: ஆண்டாள், தோழிகள்

நாச்சியார் திருமொழி

பூபாளம் ஆதி

ஆண்டாள்: வாரணமாயிரம் சூழ வலம் செய்து

நாரணன் நம்பி நடக்கின்றான் என்றெதிர்
பூரண பொற்குடம் வைத்துப் புறமெங்கும்
தோரணம் நாட்டக் கனாக் கண்டேன் தோழி நான்

சுத்த தன்யாஸி ஆதி

இம்மைக்கும் ஏழேழ் பிறவிக்கும் பற்றாவான்
நம்மையுடையவன் நாராயணன் நம்பி
செம்மையுடைய திருக்கையால் தாள் பற்றி
அம்மி மிதிக்க கனாக் கண்டேன் தோழி நான்

## காட்சி: 5

இடம்: பெரியாழ்வார் வீடு
பங்கு பெறும் பாத்திரங்கள்: ஆண்டாள், பெரியாழ்வார், பெருமாள்

சிந்து பைரவி விருத்தம்

ஆண்டாள் .........
அன்று உலகம் அளந்தானை
அனுதினமும் நினைந்துருக

ஆழ்வார் ...........
என்று இவள் வாழ்வு ஏற்றமுறும்
என எண்ணுகையில்....
கனவில் வந்து தோன்றினான் பெருமான்!

பெரியாழ்வார் கனவில் பெருமாள் காட்சி தருதல்

ரேவதி விருத்தம்

பெருமான்: அரங்கநாதன் அழைக்கின்றேன்! - உன்
அன்பு மகளை இங்கு அழைத்து வருக!

(மறுநாள்... பெரியாழ்வார் அரங்க நாதனின் ஆணைப்படி ஆண்டாளைத் தன்னுடன் அழைத்துக் கொண்டு திருவரங்கத்திற்குச செல்கிறார்)

அங்கே.... (இசை)

(நாதஸ்வரம் ஒலிக்கிறது, கோயில் மணிகள் ஒலிக்கின்றன, வாசனைப் புகை எழுகிறது)

வலஜி விருத்தம்

திறந்தது கதவும் ஆங்கே!
அரங்கனைக் கண்டாள் ஆண்டாள்!
அறமெலாம் திரண்ட பேற்றை
அடியவர் பெற்றாற் போல
உறங்கு மணவாளன் அரங்கன்
உத்தமன் உயிரினோடு
இரண்டறக் கலந்தனள்! சூடிக்கொடுத்த
பரமனை நாடிய பாவை!

(கோயில் கதவு திறந்து கொள்ள ஆண்டாள் இறைவனோடு இணைந்து விடுகிறாள்)

## நூல் பயன்

மத்யமாவதி - ஆதி

வங்கக் கடல் கடைந்த மாதவனைக் கேசவனை
திங்கள் திருமுகத்துக் சேயிழையவள் சேர்ந்த கதை
இங்கு வந்து கேட்டவர்கள் பொங்கு கடல் உலகெங்கும்
தங்கு புகழ் அடைவர் என்று எங்கரங்கள் கூப்புகின்றோம்!

சுபம்!



மணவாளதாஸன்

தமிழகத்தில் செங்கற்பட்டு-எம்.ஜி.ஆர். மாவட்டத்தில் ஸ்ரீராமானுஜர் அவதரித்த ஸ்ரீபெரும்புதூரில் திருமதி பிரேமா-ராமானுஜம் தம்பதியருக்குப் பிறந்தவர்.

இருபத்தாறு வயது இளைஞரான மணவாளதாசன் தமிழில் புலமை இசையில் சிறப்புப் புலமை, இசைக் கருவிகள் இசைப்பதில் மிகுந்த ஈடுபாடு அனைத்தும் ஒருங்கே பெற்றவர்.

கவிதைகள் இயற்றுவது, வானொலி சிறுவர் பகுதிக்காக பல இசை நாடகங்களை படைப்பது, இவருடைய புலமைக்கு எடுத்துக்காட்டு.

கம்பராமாயணப் பாடல்களை மனனம் செய்து சிறப்பான பயிற்சியும் கொண்டவர்.

இவரது முதல் நூலான "ஸ்ரீகிருஷ்ணஸ்வாமி தூது" என்ற நூலினை வெளியிட திருமலை-திருப்பதி தேவஸ்தானத்தின் மூலம் நிதி உதவி அளித்து, நூலாசிரியரை மங்களாசாஸனம் செய்துள்ளமை பாராட்டுக்கும், பெருமகிழ்வுக்கும் தொடர்ந்து எழுதும் ஆற்றலுக்கும் பெருமை சேர்ப்பதாகும்.

